# பரிபாடல் வசனம்

ஆக்கியோன்:

யாழ்ப்பாணத்து, நவாலியூர்

திரு. ந. சி. கந்தையா பிள்ளை

(தமிழகம், பத்துப்பாட்டு வசனம், புறப்பொருள்-விளக்கம், பதிற்றுப் பத்து வசனம், அகநானூறு-வசனம், கலிங்கத்துப்பரணி வசனம் முதலிய பல நூல்களின் ஆசிரியர்.)

 1938 [விலை. ரூ 1

# முகவுரை

பரிபாடல் * எட்டுத்தொகையுள் ஐந்தாவதாக வுள்ளது. பரிபாடலென்பது செய்யுள் வகையாற் பெற்றபெயர். சங்ககாலத்து வழங்கியசெய்யுட்கள் ‡ வெண்பா அகவல் வஞ்சிகலி என்னும் நாலு பாக்களுமே. § பரிபாடலென்பது வெண்பா உறுப்பாகி இன்னபாவென்று உணராமற் பொதுப்பட நிற்கும் இயல்புடைய ஒருவகை இசைப்பா. ¶ இப்பாடலுக்குச் சிறுமை இருபத்தைந்து அடியும் பெருமை நானூறு அடியுமாகும்.

இந்நூலிற் கடவுள் வாழ்த்து என வரும்பாடல்கள் கடவுளை வாழ்த்திப் பாடப்பட்டனவேயன்றி நூலுக்குக் காப்பாக பாடப்பட்டனவல்ல. || சங்கநூல்கள் தொகுத்த காலத்து அவற்றுக்குக் காப்பு எவராலும் பாடப்படவில்லை. பிற்காலத்து கி. பி. 9-ம் நூற்றாண்டு வரையில் விளங்கிய பெருந்தேவ

---

* நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரி பாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, என்னும் எட்டும் எட்டுத்தொகை எனப்படும்.

‡ "ஆசிரியம் வஞ்சி வெண்பாக்கலியே நாலியற்றென்ப பாவகை விரியே" (தொல். செய். 417)

§ பரிபாடல்லே தொகைநிலை விரியி னிதுபா வென்னு மிய னெறியின்றிப் பொதுவாய் நிற்றற்கு முரித்தென மொழிப (தொல். செய். 432)

¶ பரிபாட்டெல்லை நாலீரைம்ப துயர்படியாக வையைந் தாகுமிழிபடிக் கெல்லை (தொல். செய். 474)

|| காப்புப்பாடி நூல் தொடங்குவது சங்ககாலத்து மரபல்ல வென்பது தொல்காப்பியத்தாலும் தொகைநூல்களாலும் விளங்கும்.

ஞரே எட்டுத்தொகை நூல்களுள் ஆறுக்குக் காப்புப் பாடியிருக்கின்றனர். இந்நூலுக்கும் அவர் காப்புச் செய்திருப்பாரென்றும் அது இறந்து பட்டதென்றும் கருத இடமுண்டு.

பரிபாடற் செய்யுட்களின் தொகை எழுபது. அவற்றுள் திருமாலுக்கு எட்டும் முருகவேளுக்கு முப்பத்தொன்றும், காடுகிழாளுக்கு ஒன்றும், வையை யாற்றுக்கு இருபத்தாறும் மதுரைக்கு நாலும் உரியன.

இப்பொழுது கிடைத்துள்ளன திருமாலுக் குரிய பாடல்கள் ஏழு, முருகக்கடவுளுக்குரியவை எட்டு, வையைக் குரியவை ஒன்பது மதுரைக்குரியது ஒன்றுமாக இருபத்து ஐந்து பாடல்கள். இவை மொத்தம் 2034 அடிகளை உடையன. திருமாலுக் குரிய எட்டுப்பாடல்களுள் ஏழுபாடல்கள் கிடைத் திருப்பது கவனிக்கத்தக்கது.

இந்நூலில், சங்கு, சமம், சந்தனம், சமழ்ப்பு, சனம், சரணம், சகடம், சலம் முதலிய எட்டுச்சகர முதற் சொற்கள் வந்திருக்கின்றன.

பழந்தமிழரின் பழக்கவழக்கம், கடவுட் கொள்கை, நீர்விளையாட்டு முதலியவற்றை இந்நூல் சிறப்பாகக் கூறுகின்றது.

தமிழ் நிலையம்
சுவாலியூர்
13—5—1938.

ந. சி. கந்தையா.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 8 | முனுவர்க்து | முனிவர்க்கு |
| 5 | 25 | உணணும். | உண்ணும் |
| 7 | 11 | நீலமேனி | நீலமணி |
| 15 | 3 | உரை | உறை |
| ,, | 6 | நின்னிறுஞ் | நின்னிலுஞ் |
| ,, | 7 | தாருடையோய் | தாளுடையோய் |
| ,, | 8 | இயம் | இயல் |
| ,, | 16 | நிரைநத | நிறைந்த |
| 16 | 18 | வெறிப்பாடு | வெறிப்பாட்டு |
| 23 | 15 | அணை | அணி |
| 47 | 19 | வெரு | வெறு |
| 79 | 19 | அறை | அரை |
| 105 | 10 | புலன் | புலங் |
| ,, | 11 | கழமர் | களமர் |
| 108 | 24 | காணுது | காணுது நிற்பாரா யுமுள்ள |

மூன்றும் பக்கம் முதல் 47-ம் பக்கம் வரையில் வலப்பக்கத் தலைப்பில் முதலாம் பாடல் என்று பிழையாக இடப்பட்டிருப்பதை அவ்வப்பாடலின் எண்களைப் பார்த்துத் திருத்திப் படித்துக் கொள்க.

ஒற்றுமை ஆபீஸ், தியாகராயநகர், மதராஸ்.

PENANG HOUSE,

*Jaffna, 8th January 1938.*

Mr. N. S. Kandiah of Navaly is a very agreeable discovery. He is a Tamil whose interest in Tamil Literature is splendidly altruistic. There are not many who are so supremely unselfish. Mr. N. S. Kandiah is a scholar, and a scholar with a modern environment. This is a great advantage, for it enables him to be a liberal in literary values and cultural assessments. He is doing yeoman service to the cause of Tamil learning by his prose rendering in Tamil of such classics as Pattuppattu and Purapporul. His Tamilagam is a mine of scholarly information well and balancedly presented. He is a patriotic scholar whose scholarship is unaffected by national bias.

(Sd.) T. ISAAC THAMBYAH, D. TH.

*President, Jaffna Association.*

# பரிபாடல் வசனம்

## திருமால்

### கடவுள் வாழ்த்து

ஆயிரந்தலையுடைய பாம்பு தீயைக் கக்குவது போன்ற தன்மையோடு (கவிந்து) மேல் நோக்கி யிருக்கும் முடியும் கரிய உடையும், பரந்த மார்பும், குற்றந்தீர்ந்த *சங்கு போன்ற வெண்ணிறமுடைய மேனியும், (மலையிடத்து) உயர்ந்த மூங்கிற் காட்டில் திரியும் பெரிய யானையின் ஏந்திய வாய் போன்று வளைந்த கலப்பைப் படையும், ஒரு காதிற் குண்டலமும் உடையவனே! தாமரை மலர் போன்ற கண்ணை உடையை! காயாவின் விரிந்த மலரை ஒத்த மேனியை! இலக்குமி பொருந்தி யிருக்கும் மார்பினை! ஆராய்ந்தெடுத்த மணிகள் மார்பிடத்து விளங்கின்ற பூணினை! நெருப்புச் சூழ்ந்த பெரிய மலைபோன்று உடுத்த பீதாம்பர உடையை! அழகிய கெருடக்கொடி உடையோய்! ஆணைவழி நிறுத்தலாகிய நின் காத்தற்றொழிலுள் உலகம் அடங்கி இருப்பதைப் புகழ்ந்து துதிக்கும்

---

*பலதேவனும், திருமாலும் ஒருவராக வழுத்தப் படுகின்றனர்.

நாவலந்தீவின் அந்தணரது அரிய வேதங்களின் பொருளாயுள்ளவனே!

நின்னை எதிர்த்துப் போர் செய்வேம் என்றெழுந்தவரின் வலியை அழித்துப் போரில் மேம்பட்ட குற்றந்தீர்ந்த தலைவ! முனிவர்களது தந்தை! இலங்குகின்ற பூணணிந்த திருமால்! நின் வரலாற்றைத் தெளிவாக அறிதல், தெளிந்த உள்ளத்தினையுடைய முனிவர்க்குமரிது; அவ்வியல் பினதாகிய பழைமையை யுடையோய்! இவ்வியல்பினை என்றுரைத்தல் நமக்கு எவ்வாறு எளிதாகும்; தாமரை மலரில் எழுந்தருளும் இலக்குமியாகிய மறுவடைந்த மார்பனே! நின் பெருமைகளை அறிந்துரைக்க மாட்டாமையை நன்குணரினும், பெருமையற்ற யாம் நின்னிடத்திற் கொண்ட பக்தியினாலே கூறும் இத்துதிகளைச் சிறியன வென்றிகழாது ஏற்றுக்கொண்டு அருள் செய்தல் வேண்டும்.

மிகுந்த புகழினையும் பெருஞ் சிறப்பினையுமுடைய அந்தணர் காக்கின்ற அறனும், அடியார்க்கு அருளும் நீ; ஒழுக்க மில்லோரின் ஒழுக்கத்தைத் திருத்திய குற்றந்தீர்ந்த சிறப்புடைய மறனும் பகைவர்க்கு அச்சமும் நீ; உயர்ந்து அகன்ற அழகிய வானத்தில் குளிர்ந்த நிலாவைப் பரப்பும் திங்களும், சுடுகின்ற கிரணங்களையுடைய ஞாயிறும் நீ; ஐந்து சிரங்களைப் பொருந்திய அஞ்சத்தக்க அரிய பெரிய வலிய சதாசிவனும் அவனுறைகின்ற உலகுயிர்களின் ஒடுக்கமும் நீ; இன்னுரை ஒப்பை,

இவ்வியல்பினை என்பதற்கு அன்னோரை இவ்வுல கில் யாம் காணேம்; பொன்மயமாகிய அழகிய சக் கரத்தை ஏந்தியவனும், நிலைபெற்ற உயிர்களுக் குத் தலைவனும் நீ ஆதலின், இப்புகழொடு பொலிந்து நீயே நினக்கு ஒப்பாவை. நின்னை ஒத்த புகழாகிய நிழலுடையை; பொன்னை ஒத்த உடையினை உடையை; கருடக் கொடியை; (வலம்) புரியுடைய சங்குடையை; இகழ்ந்தோரை வென்று அழிக்கும் சக்கரப்படை உடையை; கழு வின நீல மணி பரந்தா லன்ன வடிவினை! எண் ணிறந்த புகழினை! அழகிய மார்பினை!

யாம் இம்மைக்கண் விருப்பமமைந்த சுற்றத் தாரோடு மகிழ்ச்சியுற்ற நெஞ்சத்தேமாய் உனது பதங்களில் தாழ்ந்து எப்போதும் பொலிவேமாக வென்று நினது தாள் நிழலைத் தொழுது தினமும் வணங்குகின்றேம்.

## 2.

### திருமால்

### கடவுள் வாழ்த்து

மண்ணுலகும் விண்ணுலகும் அழிதலால், ஒன்று மறையுமிடத்து ஒன்று வெளிப்படுகின்ற ஞாயிறும் திங்களும் இன்றாய், விசும்பு அழிந்த ஊழிகள் பல தோன்றும். தோன்றியபின் தன் குணமாகிய ஒலியோடு தோன்றி (காற்று முதலிய பூதங்களின் பரமாணுக்கள் வளர்கின்ற) வான மாகிய முதற் பூதத்தின் ஊழிகள் பல கழியும்;

கழிந்தபின் வானத்தினின்று எல்லாப் பொருள்களையும் அசைவிக்கும் காற்றுத் தோன்றிய ஊழிகள் தோன்றும்; அதன்மேல் அக்காற்றினின்றும் நெருப்புத் தோன்றிய ஊழிகளும், அத்தீயினின்றும் தோன்றிய பனியும் மழையும் பெய்த ஊழிகளும் தோன்றும்; பின் அந் நீரினின்றுந் தோன்றுதலால் மீண்டும் அவ் வெள்ளத்தினுட் கிடந்து (நான்கு பூதங்களின் உள்ளீடாகவுள்ள) பெரிய நிலத்தின் ஊழிதோன்றும். இவ்வூழிகளால், நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம் என்னும் எண் குறிக்கப்பட்ட அளவில்லாத காலத் தொகுதி கழியும். அதன்பின் உயிர்கள் உளவாதற் பொருட்டு அந்நிலத்தினை உயர்த்திய வராக அவதாரத்தால் பெயர் பெற்றவராக கற்பந் தோன்றும் இக் கற்பம் நின் செயல்களுள் ஒன்று. அச் செயல்கள் பலவற்றையும் செய்கின்ற நின் பெருமைக்கு உள்ள கற்பங்களை யாவரும் உணர முடியாத முதல்வ! நீ வாழ்க! சங்குபோன்ற பால்நிற மேனியுடைய பலதேவற்கு இளையை. எல்லாப் பொருள்களையும் மறைக்கும் இருள் போன்ற உடையையும் பனைக்கொடியையுமுடைய பலதேவற்கு மூதியை என் போர்க்கு முதுமை தோன்ற விளங்குவை; தவறில்லாத விரதங்களுடைய ஞானிகள் ஆராயும் வேதங்களால் தெரிந்து உணரின் உயிர்கள்தோறும் அந்தரியாமியாய் நிற்பை; இந்நிலைமைகளும் நின் கட்டோன்றும் தொன்மை நிலைபோல நினக்கே

உள்ள விசேடங்களாம். வானவில்லை ஒத்த ஆப ரணங்களின் அகத்து முத்துப் பதக்க மாகிய மதிக்கு மறுவெனும்படி விளங்கும் இலக்குமியை மார்பில் உடையை. உயர்ந்த திரையுடைய கட லுள் மூழ்கி விளங்குகின்றதும், இடையே புகர் நிற முடையதுமாகிய மருப்பினுல் பூமியை எடுத் தாய்; எடுத்து மணனயர்தலின் புள்ளிவடிவின தாய நிலனும் வெள்ளத்தால் வருந்திற்றிலது. வெகுண்டு வீரத்தோடு ஒலிக்கின்ற காற்றுப் போல்திரண்டெழுந்த அவுணர் கொடிகள் அறுந்து வீழவும், செவிகள் செவிடுபட்டு முடிகள் அதிரவும், உலகங்கள் நிலை தளரவும், நின் சங்கு (பாஞ்சசன் னியம்) இடியை ஒப்ப முழங்கிற்று. நீ ஏந்திய ஆழிப்படை, வேரும் மடலும் குருத்தும் பறியாத நீண்ட பனை நின்ற நிலையில் விழ அதன் மீதிருந்த பல பழுபிரங்குலைகள் அதன் தலையினின்றும் நீங்கித் தரைக்கண் உதிர்வன போலத், தலைகள் வலியழிந்து சாய்ந்து ஒன்றும் உடன் மிசை நில்லா மற்கொத்தாக இற்றுத், தரித்த தாரோடு புரளும் படி ஒரு காலத்தே கொய்தது. அதனுல் அவை யுருண்டு பிளந்து நெரிந்து பின் வேறு வேரு யுருண்டு சிதறி மூளை சொரிந்து நிலத்தின் கண் சோர அவுணர் மாய்ந்தனர். இவ்வாறு கொடிய போரைச் செய்யுந் தலைவ! நீ தரித்த சக்கரப் படை பகைவரின் உயிரை உடனே உண்ணும். கூற்றின் உடலை ஒக்கும். அதன் நிறம் உருக்கிய பொன் போன்று எழுந்து அசைகின்ற நெருப்பின்

வடிவினது. நின் நிறைந்த வாய்மை, தப்பாமல் வருகின்ற நாட்களை ஒத்தது. உனது பொறை, நிலத்தை ஒத்தது. யாவர்க்கு மொத்த நின் அருள் நீர் நிறைந்த மேகத்தை ஒக்கும். நாவலந்தீவி லுள்ள அந்தணரது அரிய வேதங்களின் பொரு ளாயுள்ளவனே! இவ்வாறெல்லாம் உணர்ந்து, யாம் சொல்லிய அப்பொருள்களையும், சொல்லாத பிறவற்றையும் பண்புகளானும் தொழில்களானும் ஒத்தனை! ஒத்தும், ஒப்பின்றி எப்பொருள் அகத் தும் இருப்பவன் நீ.

சிவந்த வாயுடைய கருடக் கொடியோய்! வேதத்துட் சொல்லப்பட்ட வேள்வி ஆசானின் சொல்லும், உயர்ந்த வேள்வி யூபத்திற் கட் டிய பசுவும், தீயை உண்டாக்கும்போது சொல் லும் மந்திரங்களைக் கூறி உயர்ந்த எரியை முறை யாகத் தீக்கடை கோலிற் கடைந்து தீயை வளர்த் துக் கொள்ளுதலுமாகிய இவை முறையே நின் வடிவும், உண்டியும், கடவுள் இல்லை என்பார் உண்டு எனும்படி நின் பெருமைக்குத்தக அந்த ணர் காண்கின்ற நின் வெளிப்பாடுமாகும்.

தேவர்க் குணவாகிய அமிர்தத்தைக் கடைந்து கொடுப்பதாக நின் மனத்தின்கண் நினைந்த அள வானே அவர்க்கு அதன் பயனாகிய மூப்பின்மை யாகிய தன்மையும், ஒழியாத வலியும், தம்சாவா மரபு போல உரிய வாயின. ஆகவே நின் பல் புகழ் பரந்தன. அதனால் அத்தன்மைத்தாகிய

அரிய மரபினேய்! நின் அடியை யாமும் அசைவில்லாத நெஞ்சினேமாய் வணங்கிப் பலகாலும் ஏத்தி வாழ்த்தி வேண்டிக் கொள்வேம். எம்மறிவு, கொடுமையை அறியாதிருப்பதாகுக.

—கீரந்தையார்

## 3.

### திருமால்

### கடவுள் வாழ்த்து

மாயோனே! மாயோனே! மறு பிறப்பை அறுக்கும் மாசில்லாத சிவந்த பாதங்களுடைய நீலமேனி போன்று விளங்குந் தோற்றமுடைய மாயோனே! நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்னும் ஐந்து பூதங்களும், இவற்றோடு ஞாயிறு, திங்கள், வேள்வி முதல்வன், என்னும் மூவர் சேர்ந்த அட்ட மூர்த்தங்களும், திதியின் சிறுவராகிய அசுரரும், காசிபன் மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும், குற்றமற்ற எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரரும், தாவிச் செல்லும் குதிரை வயிற்றிற் பிறந்த அசுவினி தேவர் இருவரும், இயமனும், அவன் ஏவல் கேட்கின்ற கூற்றுவரும், ஒவ்வொன்று ஏழுவகைப்பட்ட மூவகை உலகமும், உலகின் உயிர்களும் நின்கட்டோன்றிப் பரந்தனர் என்று அழியாத மெய்ம்மையுடைய வேதமுரைத்தது. அவற்றை யெல்லாம் கூறுவதற்கு உரியமல்லே மாயினும் ஈண்டு சிலவற்றைப் பிறழ உரைக்

கின்றேம், வேதமாகிய தடாகத்துள் மலர்ந்த பிரமனும், அவன் தாதையும் நீ என்று நாவலந்தீவின் அந்தணர் அருமறை புகலும். காவல் காத்து நின்ற விளங்குகின்ற அழகிய ஆபரணமணிந்த அமரரை ஓட்டிக், கவர்ந்து வந்த அமிர்தத்தால் ஈன்றாளது துன்பத்தைக் களைந்த புள்ளினை ஊர்தியாகவுடையோய்! அன்னையின் துயர்களைந்த கருடனை எழுதப்பெற்ற கொடியோய்! உனது சிவந்த பாதங்களைத் தொழாதவர்களுமுளரோ? குறள் வடிவாக உலகை அளக்கின்ற காலத்து கீழேழுலகத்தையும் எஞ்சாமல் அளந்த அடியினையுடையை! எல்லாவற்றையும் எரிக்கின்ற நெருப்பு, கூற்றுவர், ஞமன், குற்றமில்லாத ஆயிரங்கதிருடைய பன்னிரண்டு ஆதித்தர், என இவரெல்லாம் ஒன்று கூடும் உக இறுதிக்கண் பூமி நீயிடை அமிழ்ந்திற்று. அக்காலத்தும், பன்றியாகி அதனை மருப்பாற் பெயர்த்தெடுத்தாயென்றும், விசும்பினின்றும் ஒழுகும் புனலை வெள்ளை அன்னச் சேவலாய்ச் சிறகினாற் புலர்த்தினை யென்றும், பூமியிலுள்ளவற்றையும் தேவராகிய முனிவரும் வானத்து உறையும் முப்பத்து மூவரும் விசும்பினின்றும் நின்னைத் துதித்துப் பாடுவர். அன்னோர் பாடுவது, தமக்கு முன்னோராகிய பாடுவோரின் முறையே. எம்பாடல்கள் தாமும் எமக்கு முன்னோர் பாடும் முறையினவே. நின் தொன்மையையும், பெருமையையும் அறியமுடியாத தன்மையில் எமக்கும் அவர்கட்கும் வேற்றுமை யின்று.

கூந்தல் மாவென்று கண்டோர் சொல்லும் வடிவோடு வந்த கேசி என்னும் அசுரனது கனல் கின்ற சினத்தைத அழித்தோய்; எண்ணி றந்த நின் கைகள் நின் புகழை ஒத்தன. மோகி னியாகிய நின் வடிவினைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச் சியே அவுணர்க்கு அச்சமாய் முடிய இருதிறத் தாரும் கடைந்த நல்ல அமிர்தத்தை அமரராகிய ஒருவர்க்கே பகுந் தளித்தலால் நடுவு நிலைமை திறம்பின நலனில்லாத ஒரு கையினை யுடையை. இரண்டு கையுடைய மாலே! (அன்பர் தியானிக் கின்றபடி தோன்றும்) மூக்கை முனிவ! நாற்கை அண்ணல்! ஐங்கை மைந்த! அறுகை நெடுவேள்! ஏழுகை ஆள! எண்கை ஏந்தல்! ஒன்பது விசா லித்த கையும் பெரும்புகழுமுடையோய்! பத்துக் கையுடைய மதவலியோய்! நூறு கையுடைய ஆற்றலோய்! ஆயிரம் விரிந்தகையும் மாயமும் உடையமள்ள! பதினாயிரங்கையுடைய வேதமுதல்வ! நூறாயிரங்கையுடைய ஆறறிகடவுள்! இவை மாத்திரமல்ல; பல ஆம்பல் என்னும் எண்ணாலும், இனைத்தென எல்லை அறியப்படாத வடிவினை! நின்னை உயர்வு கூறக்கருதின், அவ் வுயர்வை நீயே அறிவையல்லது, பிறரால் உணரப்படுதியோ? அநாதியாய் வரும் வேதங் களுக்கு முதல்வ! விரிந்த ஆகமங்கள் அனைத் தானும், அகங்காரத்தானும், மனத்தானும், உணர் வினானும், மற்றும் எல்லாவற்றானும் நினக்கு வனப்பும் எல்லையும் அறியப்படாத மரபினோய்.

அழகும் தன்மையும் விளக்கமாகிய ஒளியுமுடைய பிறையாய் வளர்கின்ற பதினாறுகலையுடைய பூரண சந்திரனின் ஒளியை உணவாக உடையவரும், அழகிய இரத்தினங்கள் பதித்த பசிய பூணுடைய வருமாகிய அமரர்க்கு முதல்வன் நீ. அவுணர் மயக் கத்தால் நினக்குப் பிழை செய்தனர். அணுத் திரிந்த நிலவுலகத்தை நீ அளக்க அப்பெருமை யைக் கண்டு, மூறுக்கவிழ்ந்த தண்ணிய மாலே யுடைய அவுணர் அஞ்சி அகன்றுபோய்க் கட லிடத்தே பாய்ந்தனர். அப்பிழை செய்த அவு ணர்க்கும் பிழை செய்யாத அவுணர்க்கும் தலைவன் நீ. நின் இயல்பினை அறிவோர்க்கு இவர் பகைவர், இவர் நட்டார் என்றும் கூறுபாடுண்டோ? விளங்குகின்ற ஆயிரந்தலையுடைய அரவை வாயி டத்தே கொண்ட நின் ஊர்தியாகிய சேவலும் நொந்து செங்கண்மாலே! ஓ! என்று அலறும் காலமுதல்வன் நீ. நீ இத்தன்மையை என்று சாம வேதஞ் சொல்லுதலின் இத்தன்மையை விளக்க அறிந்தனம். தீயினுள் வெப்பம் நீ; பூவினுள் நாற் றம் நீ; கல்லினுள் மணி நீ; சொல்லினுள் வாய்மை நீ; பூதத்துக்கு முதல் நீ; ஞாயிற்றின் ஒளி நீ; திங் களின் தட்பம் நீ; இன்னும் கூறாத எப்பொருளும் நீ; அவற்றின் உட்பொருளும் நீ; ஆதலால் நீ தங்குதலுமில்லை; தங்குமிடமுமில்லை; மறதியில்லாத சிறப்பினால் மாயத்தையுடையவர் அலையை. உல கின் முதலினும், இடையினும், இறுதியினும், படைப்பு, அளிப்பு, அழிப்பு என்னும் தொழில்

வேற்றுமை பற்றிப் பிறவாப் பிறப்புடையை அல்லை; அங்ஙனம் பிறந்தும் பிறப்பித்தோரை யுடையை அல்லை. காயாம் பூ நிறத்தினை. அருளே கொற்றக் குடையாகவும் அறமே செங்கோலாக வும் வேறு நிழல் படாமல் மூவேழுலகும் ஒரு நிழ லாக்கிய காவலுடையை! பூதங்களைந்தும், கன் மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், புலன்களைந்தும், மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கும்; புருடனுமெனப்பட்ட தத்து வம் இருபத்தைந்தானும் நால்வகைப்பட்ட உகங் களினும் ஆராயப்படும் பெருமையுடையை.

வாசுதேவனே! பலதேவனே! பொன்னிற மேனி யுடையை காமனே! பச்சுடம்புடைய மாலே! ஆய்ச்சியரோடு கைகோத்து ஆடுதலின் அவர் குலமும் இடமும் ஆயினேய்! அறியப் படாத மரபினோய்! அன்பரது விடாத நினைவின் கண்ணோய்! மாயாத நிலை பேற்றை யுடையவனே! பழைய முறையில் வந்த புதல்வா! நல்ல யாழுடைய பாணா! வனமாலை யணிந்த செல்வ! வெற்றிச் சங்குடையவனே! பொன்னிறத்தால் மிக்க ஆடையை யுடையாய்! வலம்புரிச் சங்கைத் தாங் கிய அண்ணலே! மற்போரில் வல்லவ! இலக்குமி யின் நாயக! பெருவலியுடைய மள்ள! பெரிய உலகந் தோன்றாத காலத்து, நிறைந்த வெள்ளத் தின் நடுவே பிரமனைக் கொண்ட உந்திக்கமல

மாகிய பொருட்டுத் தாமரையை யுடையை! நின் சக்ரமே உலகுக்கு நிழலாவது.

—கடுவனிள வெயினனார்

## 4

திருமால்

### கடவுள் வாழ்த்து

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையும் மயக்கமற நீக்கி, நட்பு, கருணை, பெரியோர்பற்று, (தீயவற்றில்) இகழ்ச்சி என்னும் நான்கினோடும் சித்தத்தை மாசறுத்து, சமாதி என்னும் ஒரு நிறைக்கண்ணே தம்மை நிறுத்திய அன்பர் தொழுதேத்தி நின் புகழ் விரித்தனர்; அப்புகழ் எல்லாம் நினக்கு இயல்பாவதல்லது வியக்கப்படுவன வல்ல; இத்தன்மையை அறிந்தேமாயினும், யாங்கள் அவற்றுட் சிலவற்றை அங்குமிங்குமாகப் பிறழக் கூறக்கேட்டு நீங்குதலும் எங்கட்குப் பெருமையாகும்; ஆதலால் நாம் நின் புகழை நீங்கேம். நின் திருமேனி நீலமணியையும், கடல் நீரையும் சூல் முதிர்ந்த கார் முகிலுமாகிய இம் மூன்றையும் ஒக்கும். நின் கரிய நிறத்தோடு மாறுபட்ட பொன் நிறமுடையை! பகைத்தவர் உயிரைக் கொள்ளும் சக்கரத்தை யுடையை! கோபத்தாலன்றி இயல்பாகச் சிவந்த கண்ணு டையை! பிருங்கலாதன் நின்னைப் புகழ்ந்தான். அதனைக்கண்டு பொறாத இரணியன் சினத்தீயால்

புகைந்தான். புகைந்து பிருங்கலாதனைப் பலபடப் பிணித்தான். அதனாலுண்டான நடுக்கமுடைய அப்பிருங்கலாதன், தாதை யாதலின் அவ்விகழப் படுவானை இகழாதிருந்தான். நீ அவ்விரணியனை இகழ்ந்து, நின்னை நட்ட அப் பிரகலாதன் வருந் தாமல் அவன் நெஞ்சிற் பொருந்தினாய். நின்னோடு ஒன்றாகும்படி வரம்பெற்ற இரணியனது வரை போன்ற மார்பின் வலிகெட தூணிலின்றும் புறப்பட்டாய். அப்போது துன்பத்தைக் காட்டும் உற்பாதங்களோடு பொருந்தி அவனது இடி போன்ற முரசு ஒலித்தது. நீ பலபடியாக, உகிரி னால் அவனது ஊனை வகிர்ந்தாய். பூமி வெள் ளத்து அழுந்திய காலத்து வராகமாகிக் கருமையும் வலியுமுடைய கழுத்தால் தாங்கி அதனைவெள்ளத்தி னின்றும் எடுத்தாய். அத் தொழில் பலர் புகழும் மேருவின் தொழிலோ டொக்கும். நின் வெம்மை யும் விளக்கமும் ஞாயிற்றின் கண்ணே காணப் படாநின்றன. நின் தண்மையும் தண்ணளியும் திங்களின் கண்ணே உள; கொடுக்கக் கொடுக்கக் குறையாத நின் தன்மையும், கொடையும் மாரியிடத் துள; நின் தாங்குகின்ற தன்மையும் பொறையும் பூமியிடத்துள; நின் வெளிப்படுந் தன்மையும் பெரு மையும் நீரிடத்தே உள; நின் வடிவும் சொல்லும் ஆகாயத்துள; நின் வருகையும் ஒடுக்கமும் காற்றி லுள; அதனால் இவையும் உவையும், அவையும் பிறவுமாய் நின்னிடத்தினின்றும் பிரிந்து நின்னால்

காக்கப்பட்டனவெல்லாம் பின்னும் நின்னோடு மேவலமைந்தன.

கருடன் தங்கியிருக்கும் உயர்ந்த கொடியோய்! கருடன் ஓங்கிய கொடியுடைய நின் ஒரு கொடி பனை; மற்றொன்று கலப்பை; இன்னொன்று யானை; நினது ஒப்பில்லாத கொடியோடு ஒப்ப எழுங்கொடி வேறின்று. விடப் பாம்பின் உயிரை உண்ணும் கருடன் தனது வயிற்றில் உதர பந்தமாகக் கட்டியிருப்பது பாம்பு. அவனது வலை பாம்பு; முடிமேல் இருப்பன பாம்பு; ஆபரணங்கள் பாம்பு; தலைமேல் இருப்பன பாம்பு; பகைவர் மதத்தைக் கெடுத்தோய்! கருடன் பொன்னிறமாகிய கொடிமேலிருந்து பாய்ந்தெடுக்கின்ற இரை பாம்பு. கடிய குற்றம் உண்டாக வருத்தும் வெகுளியும், அருளும், கொடுமையும், செப்பமும் ஆகிய இவையை மறமும் அறமும் உடையாரிடத்து உடையை; இல்லாரிடத்து இல்லையாயிருப்பை. நினக்கு மாற்றாரும் கேளிரும் இல்லாராதலான், அன்பராயுள்ளார் உயிரிடத்தும் அதனை மாற்றுந்தொழிலும், பாதுகாப்புச் செய்யுந் தொழிலும் உடையையல்லை. உயிர்களது இயல்பால் நினக்குப் பகையும் நட்பும் உள போலத் தோன்றுவதல்லது, நின் இயல்பால் அவை உள வல்ல. அன்பர் மனத்திற் கொண்டனவன்றி நினக்கென வேறு வடிவு இல்லாதோய்! கண்ணைப் பறிக்கின்ற இருண்ட நீல மணி போலும்

மேனிக்கண் மலர்ந்த துளசியின் நாறுகின்ற பூங் கொத்தாற் றொடுத்த கண்ணியையுடையோய்! புகழ் பொருந்திய பொன்னிறமாகிய சீதேவிஉறை தலின் மறுவேறின மார்புடையோய்! நின் உந்தி யிற் தோன்றிய தாமரை போலும் கண்ணுடைய அளப்பரியோய்! வீடளிக்கு மிடத்து நின்னிறுஞ் சிறந்த தாருடையோய்! நின்மாட்டுச் சிறந்த கட வுட்டன்மையுடையை அத்தன்மையல்லாத இயம் புகள் நினக்கு வேறுமுள. அவை நின்னை ஒத்த தெய்வ முனிவர்களுணரும் உபநிடப் பொருள். அழலை ஒத்த இலையும், நிழல்தரும் கிளைகளுமுடைய ஆலும், கடம்பும், ஆற்றிடைக் குறையும், காற்று வழங்காத நிலையான குன்றும் பிறவுமாகிய அவ் விடங்களைப் பொருந்திய பல தெய்வங்களாக வகுத் துச் சொல்லப்படும் பெயரையுடையோய்! எங்கும் நிரைந்தவன்நீயே; நின் அன்பர்கள் தொழுத கையினது தாழ்ச் சிக்கண்அகப்பட்டோய் நீ; அவர் நினைத்தன முடித்தலால் அவரவர் ஏவல் செய்வா னும் நீ, அவரவர்கள் செய்த பொருள்களுக்குக் காவலும் நீ.

—கடுவனிள வெயினனார்

## 5.

செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

மிகவுயர்ந்த பிணி முகமென்னும் யானையை ஊர்ந்து சமர்புரிந்தஞான்றுசூரபன்மா கடலித்தே

சென்று மாவடிவாக நின்றானை, நீ, தீ எழும்படி சுழற்றி எறிந்த வேல், பெரிய இருண்ட கடலிடத்துள்ள கற்பார்கள் பொடிபடும்படி புகுந்து, நடுங்குகின்ற சூர்மாவை அறுத்தது; கொன்றுண்ணலால் வரும் பாவத்துக்குஅஞ்சாத பாவசனம் புண்ணியசனம் என்னும் மாயத்தையுடைய அவுணரைக் கொன்றது. அவ்வேலினால் நாவலந்தீவினுள் வடபகுதியிற் கிரவுஞ்ச மென்னும் பெரிய மலையைத் துளைத்து வழியை உண்டாக்கிய ஆறுமென்றலையை உடையாய்! ஆறு மென்றலைகளுடனும் பன்னிரண்டு தோள்களுடனும் ஞாயிற்றின் தோற்றம் போலும் நிறவழகுடனும் தாமரைப் பூவின்கட்பிறந்த பிறப்பை யுடையை! உலகத்தை அழிக்கும் கடவுட்கு மகனே! அமைதியினை யுடையாய்! நீ வெளிப்படுதலின் கண்டார்க்கு அச்சந்தரும் வெறியாட்டு விழவினுள் வேலன் கண்டு இவ்வாறெல்லாம் நின்னைச் சொல்லி ஏத்தும் வெறிப்பாடு முள. இவ்வுலகிற்கெல்லாம் தலைவன் நீயே யாகலான் அவ்விடத்து அவன் கண்டு ஏத்துகின்ற அப்பாட்டுக்கள் மெய்யுமல்ல; அவற்றுள் ஒன்றாய வழி அத்தலைமைச் சிறப்பினையுடைய நீ அச்சிறப்பின்றி ஒழிகுவை! நின்னை ஒழிந்தார் நல்வினையாற் சிறப்புடைய உயர் பிறப்பினராதலும் தீவினையால் இழிபிறப்பினராதலுமாகிய இது நின் ஆணைக் கண்ணது; ஆதலின், அச்சிறப்பு நினக்கு ஒருகாலும் ஒழியாது.

வேதங்களாகிய குதிரை பூண்ட பூமியாகிய தேரை நான்முகனாகிய பாகன் செலுத்துமா றறிந்து செலுத்தினன். அமரர்க்குச் செய்யும் வேள்விக்கண் அவிர்ப்பாகத்தை உண்டவரும், கோபத்தாற் பசிய கண்களை யுடையவருமாகிய ஈசன் தேர்மீது ஏறினன்; ஏறி, வெள்ளி பொன் இரும்பு என்னும் அரிய மூன்று மதில்கள் ஒரு தீயாகிய அம்பால் வேகும்படி வாசுகியை நாணாக வுடைய மேருவாகிய வில்லை வளைத்துத் திசைகள் வெதும்ப எய்தான்; எய்தபின் உமையோடு புணர்ந்து காமத்தை நுகர்கின்ற வதுவைநாளில் அமையாத கலவியை ஒருகாலத்து அமைத்தான். நெற்றிக்கண்ணும் இமையாத நாட்டமும் உடைய அவ்விறைவனிடத்து ஒரு வரத்தைப்பெற்ற இந்திரன் இந்தக் கலவியாற் றோன்றிய கருவை அழிப் பாயாக எனத் தனது வச்சிரப்படையை ஏவினன். மழுப்படையைத் தாங்கிய இறைவன் வாய்மையன் ஆதலின் இந்திரனுக்குத் தான் கொடுத்த வரம் அரிதென்று உலகேழும் அவன் மெய்ம்மையை வியக்கும்படி அதனை மாற்றாதொழிந்தான். அதனால் இந்திரன் அதனைப் பலகண்டங்களாகச் சேதித் தான். சேதித்தலால்சிவந்த உடம்பு அதற் குரிய கருவை "இது அமரர் சேனைக்குத் தலை வனும்" எனத் தெய்வ முனிவர்கள் ஞான திருஷ்டியால் நன்று யறிந்தனர். அறிந்து இந்திரனுடைய கோபம் அனுகாதிருக்கும்படி

மறை மொழி கூறி அவன் பக்கலினின்றும் அக்கரு வினை எடுத்துச் சென்றனர் ; சென்ற தெய்வ முனிவர்கள் எழுவரும், " துண்டங்களாக்கப்பட்ட இக்கருவை நம் மனைவியர் உட்கொண்டு சூல் நிறை யப் பெறுவாராயின் அவர் கற்பில் நிரம்பார் " என நினைந்தனர் ; நினைந்து அங்கியங்கடவுள் தானே தரிப்பதாக என எண்ணினர் ; எண்ணி அழல் வேட்டு அதன் கண் கருவினை அவியுடனே பெய்தார் ; அவியோடு குண்டங்களில் எழுந்த முத் தீக் கொள்ளுதலால் பரிசுத்த மடைந்த அதனை வானத்து வடபால் உறைகின்ற அம் முனிவர்க ளின் மனைவியர் எழுவருள் கடவுட் கற்பினையு டைய ஒரு மீனாகிய அருந்ததி ஒழிய விளங்குகின்ற கார்த்திகையாகிய அறுவரும் அப்பொழுதே அயின்றனர். தம் கணவர் வேண்ட அயின்ற கரு வாதலின் மறுவற்ற கற்பினையுடைய அம்மாதவர் மனைவியர் நிறையுடைமை நீங்காதே நின்னைச் சூற் கொண்டார் ; கொண்டு, இமயத்துச் சரவண மென் னுஞ் சுனையிற் தாமரைப் பூவாகிய பாயற்கண்ணே ஒருங்குபெற்றாரென்று பௌராணிகர் சொல்லுவர்.
* முருகா உன்னைப் பெற்ற அன்றே

---

* " இறைவன் உமையை வதுவை செய்து கொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிர வேண்டுமென்று வேண்டிக் கொள்ள அவனும் அதற்கு உடன்பட்டு அது தப்பாதேப் புணர்ச்சி தவிர்ந்து கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுப்ப அதனை இருடி கள் உணர்ந்து அவன் பக்கல் நின்று வாங்கித் தமக்குத் தரித்தல் அரி தாகையினாலே இறைவன் கூறிய முத்தீக்கட் பெய்து அதனைத்

இந்திரன் தான் கொடுத்த வரத்தைப் பகைமிகுதியால் மீறித் தீயைக் கக்குகின்ற வச்சிரத்தைக் கொண்டெறிந்தான். அப்போது ஆறுருவாயிருந்த நீ ஒருருவாயினை. வெற்றி ஓங்கிய சேயே! வாழ்க!

---

தம் மனைவியர் கையிற் கொடுப்ப அருந்ததி ஒழிந்த அறுவரும் வாங்கிக் கொண்டு விழுங்கச் சூல் முதிர்ந்து சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறு கூறாகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகட்குக்கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிராயுதத்தை எறிய அவ்வாறு வடிவு மொன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே மண்டிச் சென்றதென்று புராணம் கூறிற்று." (திருமுருகாற்றுப்படை உரை. நச்சினார்க்கினியர்)

"சிவன் ஆறுமுக வடிவங்கொண்டு அவற்றின் நெற்றிக்கண்களாறினும் ஆறு அக்கினிப் பொறிகளைப் பிறப்பிக்க அவை உலகமெங்கும் பரந்தன. தேவியார் அவற்றின் வெம்மையாற்றாது ஓடிப்போய்த் தமது கோயிலடைந்தனர். தேவரும் பிறரும் கலங்கினர். சிவபிரான் அதுகண்டு அபயங்கொடுத்து முன்போலாறு பொறியாக்கி தம்முன் வருவித்துக் கங்கா நதியிற் சேர்க்குமாறு வாயுவுக்கும் அக்கினிக்கும் கட்டளையிட்டு, "இப்பொறிகளைக் கங்கா நதியிலுள்ள சரவணத் தடாகத்திற் சேர்த்தவுடன் புத்திரன் தோன்றுவனென்று அருளிச் செய்து தேவர் முதலானோர்க்கு விடைகொடுத்தனர். உடனே வாயுதேவனை வருணன் சூழ்ந்துவர அப்பொறிகளைச் சிறிது தூரஞ் சுமந்துசென்று மேற் சுமக்கலாற்றாது அக்கினி தேவனிடம் ஒப்பிக்க அவன் அரிதிற் கொண்டு சென்று கங்கையிற் சேர்த்தான். கங்கை சரவணத்துட் சேர்த்தது. அப்பொழுது ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் உடைய ஒரு குமாரர் தோன்றி ஓர் தாமரை மலர்மேல் வீற்றிருந்தார். அதன்பின் அவர்க்குப் பாலூட்டி வளர்க்குமாறு கார்த்தி

குழந்தைப் பருவத்தினை யுடைய நீ விளையாட்டா கச் செய்த போருக்கு இந்திரன் தோற்றான். அத னைக் கண்ட அங்கி இனி இவனே நம் சேனைக்குத் தலைவன் எனக்கூறித் தன் அழகிய கோழியைக் கொடுத்தான். வானின் வளம்பொருந்திய செல் வனாகிய இந்திரன், தன்னிடத்துள்ள விளங்குகின்ற நீலமணிபோன்ற இறகுடைய அழகிய மயிலைக் கொடுத்தான். இவரும் பிறரும் அளித்த மறியும், மயிலும் கோழிச் சேவலும், பொறியும், வரியு முடைய வில்லும், மரமும், வாளும், செறிந்த இலைவடிவினதாகிய வேலும், குடாரியும், கணிச் சியும், தெறுகின்ற கதிருடைய நெருப்பும், பாச மும், மணியுமாகிய வெவ்வேறு உருவினவாகிய இவற்றை பன்னிரண்டு கரங்களிடத்துக் கொண் டாய்; கொண்டு தேவர் சேனாதிபதியாய் அவர்க் கரசனாகிய இந்திரனது புகழ்வரம்பைக் கடந் தோய்! நினது குணத்தை ஏற்றுக்கொண்டோ

தைப் பெண்க ளறுவர்க்குத் தேவர் பணிக்க அக்குமார ரொருவரே ஆறு குமாரராகத் தோன்றி முலைப் பாலைப் பருகி வளர்ந்தனர். (கந்தபுராணம்.)

சிவவழிபாட்டோடு வேறல்லாத முருக வழிபாடு அக்காலத்து வடதேயத்தில் முதன்மை பெற்றிருந்த இந்திர வழிபாட்டால் எதிர்க்கப்பட்ட வரலாற்றையே இச்செய்திகள் குறிப்பனவாகும். புராணிகர் புனைந்துரையாகக் கூறும் பொருள்களுக்கு வேறான கருத்தமைத்துக் கூறுதல் ஆகாது.

"சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மாரறுவர் திருமுலைப்பா லுண்டான் திருக்கைவேல்". (சிலப்)

ராகிய அறவோரும் வீடுபெறுங்குணமுடையோரு மாகிய முனிவோரு மல்லது, உயிர்களைக் கொல்கின்ற தீய நெஞ்சமும் சினமும் உடையோரும், அறத்தின்கட் சேராத புகழில்லோரும், கூடா வொழுக்கத்தாலழிந்து தவ விரதத்தை யுடையோரும், இப்பிறப்பினுகர்ச்சியேயுள்ள மறுபிறப்பில்லை என்னும் மடவோரும் ஆகிய இவர்கள் நின்தாள் நிழலை அடையார். வட்டமாகிய பூங்கொத்தாற் றொடுத்த மாலையுடையோய்! நின்னை யாம் இரப்பவை, நுகரப்படும் பொருட்களும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டாலும் நுகரும் நுகர்ச்சியுமல்ல; எமக்கு வீடு பயக்கும் நின் அருளும், அதனை உண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும், அவ்விரண்டானும் வரும் அறனுமாகிய இம்மூன்றுமே.

—கடுவனிள வெயினனார்

## 6

### வையை

[இது, வையை நீர் விழா விளையாட்டிற் காதற் பரத்தை, இற்பரத்தையுடன் நீராடினன் எனக் கேட்டுப் புலந்தாளைப் புலவி நீக்கிப் புணர்ந்தானெனக் கேட்ட தலைமகள், வாயிலாகப் புக்க விறலிக்கு ஆங்கு நிகழ்ந்த செய்தியுங் கூறி வாயின் மறுத்தது.]

முகிற் கூட்டங்கள் கடலிடத்தே தாழ்ந்து நிறைய நீரை உண்டு எழுந்து ஆகாயத்தே பறந்

தன; பரந்து ததும்புகின்ற பாரத்தை இறக்கி இளைப்பாறுதற்கு மழையைப் பொழிந்தன; அப்போது மலைகளிற் சஞ்சரிக்கும் மான் கூட்டங்கள் கலங்கி ஓடின; மயில்கள் தோகை விரித்தாடின; மலையிடத்துள்ள மாசு கழுவுண்ணும்படி நீர் நிறைந்து தங்கி வாரடித்தோடிற்று; மலையின் சாரல்களின் பல வழிகளால் நீர் ஓடிற்று; புலவர்கள் புனைந்து பாடிய நல்ல பாடல்கள் பொய்யாவண்ணம் உழவுத் தொழில் தழைக்கும்படி வெள்ளம் எவ்விடத்தும் பரந்தது. ஈரம் புலரப் புகைத்தற்கு அகில் முதலியனவும், அழலும், சூடுதற்குப் பூவும், வைகைக்கு ஆராதனைக்கு வேண்டிய பொருள்களும், பொன் பூ முதலிய பலவு மேந்திய பரத்தையர், தம் மகிழ்ச்சி மிகுந்த காதலரைக் காண அலங்காரத்தோடு வைகையைப் புதுப் புனலிடத்தே கூடினர். இவ்வகைப் புனலிடத்து வந்த மட நல்லாரின் கைகள் புரிதலால் தொடிகள் அழுந்தின; தோள் வளைகள் கழன்று முன்கையிடத்தே அலைந்தன; எழுதிய தொய்யிற் கொடிகள் ஒன்றோடொன்று கலந்து அழிந்தன; *மேகலை வடங்கள் அற்று மணிகள் உதிர்ந்து நூல்கள் தோன்றின; ஆரமுத்துக்கோத்தமாலை, சாந்து முதலியன படுதலால் நிறம் மழுங்கின; நகத்திலும் கன்னத்திலும் எழுதிய செம்

* ஆடையை உடுத்து உள்ளே இரண்டு வடமாகிய மேகலையைக் கட்டி அதன் மேலே எண் கோவை முதலிய வடங்களைப் புனைவது முறை. இரண்டு வடமாய்க் கட்டுவதே பின் ஒட்டியாணம் என்று ஆயிற்றுப் போலும்.

பஞ்சு அழிந்தது; தனங்களிடத்து அப்பிய குங்கு மக்குழம்பு வட்டலிட்டது; இலைகளாற் தொடுத்த மாலையும், குலைந்தமயிரும், பூசிய சந்தனக்குழம் பை அழித்தன; தனங்களிடத்தனவும், மார்பிட தனவுமாகிய ஆடவர் மகளிர் என்னும் இருபா லாரின் ஆபரணங்களும் ஒன்றோடொன்று கலந் தன; அன்பு ஒத்த அவர் உள்ளம் நிறையாகிய வெள்ளத்தை உடைத்தது; வையையாற்றின் நிறைந்த வெள்ளம், மலையை ஒத்த அணைகளை உடைத்தது; காவல்புரிகின்ற கரைகாப்பாளர், அவ்வுடைப்பினை அடைத்தற்கு ஆட்கள்வரும் பொருட்டு பறை அறையும்படி பறைகொட்டு வோர்க்குப் பணித்தனர்; பறை ஒலி எழுதலின் அவற்றைக்கேட்டு ஊர் எழுந்தது. இவ்வாறு ஊர் எழுந்த அன்று, போர்க்கணியும் அணியினையுடைய யானையின் கூட்டம் அழகுபெறச் சென்றாற்போல, அலங்காரஞ்செய்த மகளிரும், மைந்தரும், ஆரோ கணித்திருக்கும் பிடிகளும், குதிரைகளும் நிரை நிரையாகச் சென்றன. அம்மகளிரும் மைந்தரும் அணிகளைக் களைந்து வைத்துப் புனலாடுதற்குரிய உடைகளை அணிந்து விளையாட்டை விரும்பினர்; புனலாடுதற்குரிய நீர்ப்பரப்பைப் போர்க்களமாகக் கொண்டனர்; முன்னணியிற் செல்வோர் *தூசிப் படைபோன்றனர்; புனுகுநெய்பூசிய நீர் சிந்தும் துருத்திகளாலும் பன்னீர் நிறைந்த நீர் விசிறும்

*முன்னே செல்லும் காலாட்படை.

கொம்புகளினாலும் நீரை ஒருவர் மேலொருவர் இறைத்துப் போர்செய்தனர். வெண்கிடையாற் செய்த தெப்பங்கள் குதிரையாகவும், நிறம் பிடித்த கிடையாற் செய்த தேர்களை யானையாகவும் கொண்டு ஊர்ந்து திரிந்தனர்; காதலாற் சென்று நீராடும் புறச்சேரி இளையரைத்தாண்டி உட்புகுந்து செல்ல மாட்டாத மெலியோர் துறைகள்தோறும், நின்று நீராடினர்; வலியோர் உட்புகுந்து புதுப்புனலாடினர். அதனால் வாச நீரும், சந்தனம் முதலியவற்றது குழம்பும், வாச எண்ணெயும் சூடிய பூக்களும் நாறும்படி ஒழுகின; நாற்றத்தோடு ஓடுகின்ற ஆற்றை, மறையை விரும்பும் அந்தணர் கண்டனர்; மகளிரும் மைந்தரும் பூசிய விரைகளைக் கழுவின கலங்கல் நீராதலின் தூய்தாய நிலைமை யழிந்து வேறுபட்ட புனலெனை மருண்டு நீராடுதல் வாய் பூசுதல் முதலிய தந்தொழில் செய்யாது நீங்கினர். சூடிக்கழித்த மென்மலரும், மைந்தர் தாரும், மகளிர் கோதையும், கரையிடத்துள்ள மரங்களதும் கொடிகளதுமாகிய வேரும், காயும், கிழங்கும் மேலே பரந்து வர, அவற்றின் மீது கிடாய மக்கள், உண்டு மிகுந்த கள்ளை ஊற்றுதலால் அந்த அகன்ற வையைப் புனலின் நலனழிந்து வேறுபட்டதென்று பிறரும் நீங்கினர். அந்தச் சேறுடிய புனலின் செலவு இவ்வகைத்து. எல்லையின்றி இழியும் வெள்ளிய நீரின் நாற்றத்திற் படிந்து தடையின்றிச் செல்லும் உருவிலதாகிய நல்ல காற்று இரவுக்குறிக்கண் மயங்கித் தலைவரைத்

தாலாட்டிற்று. இவ்வாறு மகளிரின் ஆகத்தே கிடந்து துயில் கூடுவது முருகனது பரங்குன்றின் கண்ணதேயாம். அவ்விடத்தே செல்லாதார்க்கு அங்கு நிகழ்பவற்றைச் சொல்லுதல் காரணமாக மதுரைத் தெருவின்கண் ஓடி வஞ்சனை செய்யுங் காமன் இரவிற் செய்த வெல்லாம் ஊரைக் காக்கும் காவலர்க்குப் புலப்பட நின்ற தெருவைகறைக் கண் வெறு நிலமாக விளங்கிற்று. தமிழையுடைய வையைப் புனல் இவ்வாறு எங்கும் பரந்தது. இவ்வாறு மகளிரும் மைந்தரும் நீராடிய தன்மையைக் கூறித், தலைமகன் காதற் பரத்தைக்குக் கையுறை காட்டினன். அக் கூற்றினால் அவன் இற் பரத்தையோடு நீராடினனென்று உட் கொண்ட காதற் பரத்தை, "பழையேனதலான், நீ இகழ்கின்ற எனக்கு அன்று, நீ எப்பொழுதும் புதிதாக விரும்பும் மகளிர்க்குக் கொய்தாய்" என்றாள்.

**தலைவன்** :—நீ அறிந்திலை. இத்தளிர்கள் அத் தன்மையின வல்ல.

**காதற் பரத்தை**:—யான் பணியா நிற்பவும் அன்பின்றி முறிந்த பண்பினை யுடையாய்! இப்பொழுது களவு வெளிப்படா நின்றது, பண்டு எனக்கு நீ கொய்த தெல்லாம் விரைவாக வருதலால் தளிர் உருவத்தில் வாடுதல் உண்டோ ? இஃது அவட்குக் கொய்து சென்று அவளால் மறுக்கப் பட்டமையால் துவண்ட வாறு பாராய்.

**காதற்பரத்தை** :—நின் மார்பிடத்துள்ள தார் வாடும்படி நின்று, நீ கொய்த வருத்தத்தை நினைந்து, ஏற்றிலளோ? கொய்த இத்தழையைக் கையிற்கொண்டு நீ செய்த தாழ்ச்சிக்காகவாவது அவள் ஏற்றிலளோ சொல்.

**தலைவன்** :—புணைந்த தெப்பத்தில் ஏறிவர வேண்டியிருந்தமையால் பொழுது தாழ்ந்தது; அதனால் இத்தளிர்கள் வையை நீர் காரணமாகத் துவண்டன; முருகன் குன்றத்தின் மீது ஆணை இது மெய்யாகும்.

**காதற்பரத்தை** :—வையை யாற்றின் வரவு அழகிய பெருக்கன்றோ! அவ்விற்பரத்தையின் காமப் பெருக்கம் வையை வரவோடொக்கும்; ஆமாம்; நீ சொல்லுகின்ற தொக்கும்; காதலையுடைய காமம் எப்பொழுதும் ஒரு தன்மையின் நிற்குமோ? சிலர்பால் விரையச் சுருங்குதலாலும், சிலர்பால் விரையப் பெருகுதலாலும் அக்காதல் வையைப் பெருக்குத் தானன்றோ? வேண்டாது கூறுற்றுப் பிழை அடைந்தனை; இனிக் கூறுறல்; வளம் பெய்கின்ற கார்காலத்து எம்பதி நின் பதிக்கு அருகாமையிலிருக்க இளவேனிற்காலத்துக் குருவிகள் இரைதேடும் தன்மைத் தன்றோ புணை காரணமாக நின்னைத் தாழ்ப்பிக்கும் வையை! ஆதலால் நின் காமத்தையும் வையைபோலக் கருது.

ஆற்றின்கட் செல்கின்ற புனல்வழியே செல்லும் மரம்போல, வெளவிக் கொள்ளுதல்

வல்ல மகளிர்க்கும் புனலாடுதற்குத் தெப்பமாகிய மார்பினையுடையாய்! சிறிதும் அஞ்சாது இரவெல்லாம் அவளோடு தங்கினாய்; அவ்வையைக் கண் உடைந்த மடையை அடைத்த விடத்தும் பின்னும் ஒழுகும் ஊற்று நீர்போல, முன் வருத்திய துன்பங் கெட நீ சேர்ந்த விடத்தும் பின்னும் ஒழுகும் ஊற்று நீர்போல முன் வருத்திய துன்பங் கெட நீ சோர்ந்த விடத்தும் பின்னும் நீர்வாரும் கண்ணுடைய மகளிர் நெஞ்சத்தை இன்னும் வருத்தா நின்று வருத்தலை ஒழி.

**தலைவன் :**—கரையிடத்து நின்ற ஒருத்தி தனது பேதைத் தன்மையால் கரையில் நில்லாது, நான் குளித்த குளத்திற் புகுந்து திரையின்கண் மூழ்கினாள்; பின் எழுந்து என்மேல் வருந்தி வீழ்ந்தாள்; குளித்த யான் எழுந்து, அணுகி எடுத்தலும் அவள் எழுந்தாள்; அவள் காமநுகர்ச்சி அறியும் பருவத்தளல்லள்; அவளை அன்றி மாலைபோல் அழுத்தப்பட்டவள் யாவளோ? அவளோடு யான் ஆடிய ஆறுயாது?

**காதற்பரத்தை :**—அதனை யான் சொல்ல அறிந்து நீயே தெளி; அத்தன்மைய ஆறு உண்டோ? அதுவே இவ்வையை யாறு.

**தலைவன் :**—யான் குளத்திற் குளிக்க நீ இவ்வையை யாறு என்ற மாறுபாடு என்னை? முன் *சூளுற்றது போலல்லாது யான் பிறள் ஒருத்தியைச்

* சத்தியஞ் செய்தது.

சேர்ந்திலேன் என்று தண் பரங்குன்றைக் கையாற்றொட்டு இப்பொழுது சத்தியஞ் செய்கின் றேன்.

இவ்வாறு இற்பரத்தையும் தலைவனும் ஊடிப் புலந்து நின்றாராக. அதனைக் கண்ட

முதுபெண்டிர்:—"நின் கண்ணின் சிவப்பிற்குத் தலைவன் அஞ்சுவான்; துனி நீங்கி நீ அவனோடு விளையாடுதலைத் தொடங்கு; இவ்வாறு துனியின் கண் புகுவாயாயிற் காம இன்பங் கெடும்; அக்காம இன்பத்துக்குக் காரணமாகிய நீ, அவனைக்காய்ந்து காய்ந்து சுழற்சியை நெஞ்சிற் பூட்டுதலால் நீ இராக் காலத்து நீங்கற் பாலை யல்லை; நீங்கின் இடனறிந் தூடி இனிதின் ஊடும் ஒழுக்கத்திற் பிழையாகும்;" எனப் புலவி தணியுமாறு இற் பரத்தையை வேண்டினள்.

இவ்வாறு ஊடல் உணர்த்தவல்ல வாயில்கள் இரந்தும் பரந்தும் வருந்தி யுணர்ந்த அவ்விரு வருங் கூடி மது உண்டு களித்தனர்; களித்து வையைக்கட் புனலாடினர்; ஆடிக்காம மிகுதியாற் கலந்தனர்; கலந்தபின் இன்ப முண்டாகப் புலந் தனர்; பின் அவ்வவ் விடங்கடோறும் சென்று விளையாடா நின்றனர்.

இவ்வாறெல்லாம் தலைவன் காதற் பரத்தை யோடு இன்பம் நுகர்ந்தா னென்று தலைவி, ஊடல் தீர்க்கும் வாயிலாகப் புகுந்த விறலிக்குக் கூறி னள். பின் வையையைப் பார்த்து, "வையாய்! நின்

கட் புனலாடுவோர் நெஞ்சத்து, மிக்குப் பொருந்திய இக்காமத்தை உண்டாக்குந் தன்மை நினக்கு எஞ்ஞான்றுங் குறையா தொழிக" என்று வாழ்த்தினள். வாழ்த்தித் தலைமகன் செய்தியை வற்புறுத்தி வாயின் மறுத்தாள்.

—ஆசிரியனல்லந்துவனார்

## 7

### வையை

[இது, தலைமகன் தலைமகளோடு புனலாடினானெனக் கேட்டு இன்புற்ற செவிலித்தாய், தோழியை நீங்களாடிய புனல் விளையாட்டு இன்பங் கூறு என, அப்புனல் ஆட்டின் இன்பமும் பலவேறு வகைப்பட்ட இன்பமும் தலைமகன் காதன்மையுங் கூறி என்றும் இந்த நீராட்டின்பம் யாம் பெறுக என்றது.]

முகிலின் கூட்டங்கள், நிரையும் குளிர்ச்சியுமுடைய கரிய கடல் வற்றும்படி நீரை உண்டன; உண்டு வலிய இடி வெகுண்டு ஆர்ப்ப, தம்மீது ஏறிய பாரத்தைத் தாங்கமாட்டாது, கரை உடைந்த குளத்து நீர் பெருகுமாறு போல, தமது பாரம் கழலும்படி மழையைப் பொழிந்தன; மலை உச்சிகளினின்றும் அருவிகள் நிரம்பி இழிந்தன; இழியும் அருவிகள் மற்றிடங்களினின்றும் வரும் பலபுனல் ஓட்டங்களோடு சென்று பெருகின; வெற்றியுண்டாக ஒலிக்கின்ற முரசினையுடைய பாண்டியர், கொள்ளக் கருதிய நாட்

டைச் சேர நிமிர்ந்து செல்லும் அவர்தானையின் நீண்ட தலையின் நிமிர்ச்சிபோல, யாம் செல்லுமிடம் அரிதென்னாது இருளுடைய இரவும் பகலுமாக வந்தது; இவ்வாறு வந்த வையைப் புனல் உயிர்கட்கு நன்மை மிகவும், மெல்லிய புலங்கள் அழகு பெறவும் பெருகி நரந்தம் புல்மீது பரந்தது; வேங்கையின் பூங்கொத்தினின்று முதிர்ந்த பூவோடுகூடி, கிட்டுதற்கரிய மலை உச்சிகள் தோறும் நின்று மழையால் வருந்திக் காற்றால் அலையும் கிளைகளுடைய பெரிய மரங்களின் வேரை அகழ்ந்து உயரத்தே யுள்ள பள்ளங்களை நிரப்பிற்று.

உழவர் மகிழ்ச்சியால் ஆடினார்; சிவந்த பூக்கள் அணிந்த முழாக்களும் பெரும் பறைகளும் ஒலிக்க ஆடும் ஆடலியல்பு அறியாதமகளிர்போலத் தான் வேண்டிய இடங்களிற் புனல் சென்றது; ஊடல் இயற்கை அறியாத ஊடல் உவகையாள் கணவனைக் கடந்து நிற்குமாறுபோலக் கட்டிய அணைகளை முறித்தது; விதிமுறையோடு செய்த மெய்யிடத்தே பூசும் கலவை நாற்றம்போல் புதிய பல நாற்றத்தை உள்ளே அடக்கி மேலே புதிய நாற்றத்தைச் செய்தது.

வெள்ளம் பாய்ந்து வரப்புடைத்த நீரால் நீர்நிலைகளில் மலர்கள் மேலே மிதந்தன எங்கும் ஒருபால் ஆரவாரம் எழுந்தது; விளையாட்டு மகளிர், தாம் மணலிலே இழைத்த பாவை சிதைந்த

தென்று ஒருபால் நின்றழுதனர்; அகன்ற வய லிடத்துள்ள இளம் நெல்லின்கண்ணும், அரிந் தடுக்கிய நெற்சூட்டின் கண்ணும், நீர் சூழ்ந்த தென்று ஒரு பக்கத்தே ஒருபால் துடி கறங்கின; ஊரைக் கடல் சூழ்கின்றதென்று ஒரு பக்கத்தே ஆரவாரமெழுந்தது, வானிடத்தே மழை பெய்த லொழிந்ததென்று ஒரு பக்கத்தே ஆரவார மெழுந்தது; பாடுவார் இருந்த பக்கத்தை நீர் கொண்டதென்றும், ஆடுவார் சேரியை வெள் ளம் அடைந்ததென்றும், வெள்ளம் ஓடும் வாய்க்கால்கள் கழனியை நீரினால் தொடுத்தன வென்றும், தெங்கு, கமுகுகளின் கழுத்தை நீர் முட்டுதலால் வாளைமீன் அவற்றை உண்டன வென்றும், நாற்றங்கால்கள் வண்டல் ஏறுண்டு மேடாயினவென்றும், ஒவ்வோர் பக்கங்களிலும் ஆரவாரமெழும்படி, ஊடலைத் தானுணர்த்த உணரா மாதரைக் கூட்டுவித்தற்கு முயலும் கண வனது ஆசை வெள்ளம்போல் புனல்விசையோடு சென்றது; சென்று கிளைமுதிர்ந்த வாளைமீன் கூட்டம்போல, விலாப்புடைக்கும்படி கள்ளுண்டு நிற்கும் உழவர் கூட்டம் நிற்கும் இடத்தே சென்று பரந்தது; பரந்து இடிந்த மலைபோலக் குத்துண்டு நிற்கும் இருகரையாகிய காவலுட்பட்டு நின்றது. (அவ்வையை நீர்) அது நுரை சுமந்து பூவான் மூடுண்டு பொழிலின்கட் பரந்து தன்னிடத்தே விரைந்து நீராடுவாராகிய மகளிர் காதின்கண் தளி ரைச் செருகி, மைந்தர் கண்ணியைப் பறித்தது;

பின் மகளிர் தலைக்கோலம், உடுத்த துகில், இருவடமாய்த் துகிற்குள் அணியும் மேகலை, எண் வடமாய் அதன் புறத்தணியும் காஞ்சி, மைந்தர் ஆழி, மோதிரம், வாகுவலயம் என்று இவை எல்லாவற்றையுங் கொண்டது; அத்தன்மை பாண்டியன், பகைவர் நாட்டிற் புகுந்த தன்மையை யுடையதாயிருந்தது.

மிக்க தகைமையுடைய அவன் ஆடுகின்ற ஆய மகளிரெல்லாம் ஒருவரை ஒருவர் துரந்து புனலை எற்றினர்; அவர்கள் கண்கள் அப்புனலை ஏற்று அமைந்தன; அவருள் ஒருத்தி அதற்குத் தோற்றுக் கண்களைக் கையால் மறைத்தாள்; வெற்றியால் இறுமாந்த ஒருத்தி தான் கழுத்திலணிந்திருந்த பொன்னூணியூல் தொய்யிற் குழம்பாலெழுதிய கரும்பினையுடைய அணைபோலும் அவள் மென் தோள்களைக் கட்டிச் சிறையாகப் பிடித்தாள்; அச்சிறைப்படுத்தப்பட்டவட்கு பரிந்து கைப்பிணிப்பினின்று நீக்குதற்குப் பாய்ந்த ஒருத்தியின் கூரிய வேல் போன்ற கரிய கண்ணொளியால் சிவந்த புதுப்புனல் இருள் நிறமாயிற்று; வையைப் பெருக்கின் வடிவு இதுவாகும்.

புனலை விரும்பி ஆடிய உடம்பு, ஈரந்தீர்ந்து வெம்மை உண்டாதற்குக் காரமுள்ள கள்ளைக் குடித்தற்கு ஏந்திய போது, அவள் கண் செய்தற்பூவை ஒத்தன. அந்நறவை அருந்தின பொழுது

அவள் கண்கள் கண்டார்க்கு மகிழ்ச்சியைத் தரும் பெரிய நறவம் பூவை ஒத்தன.

தலைவன் அக் கண்ணியல்பைக்கண்டு புகழ்ந்து அவற்றின் பெண்ணின் அழகுத் தன்மையுடைய நோக்கினை விரும்பிப் பாண்சாதி போலப் பலவகை யாற் பாடினான்; அப்பாட்டைத் தன் காதலியைப் பாடுகின்றதறியாது, வேறொருத்தி கேட்டு அவ னோடு கூடுதற்கு வருத்தமுற்றாள்; அவ்விடத்து அதனைக் கண்டு இனி எனக்கு என்ன சம்பவிக்கு மோ என்று அஞ்சித் தலைவியைச் சேர்ந்து நடுக்க முற்றான்; நறவுண்டதினால் சிவப்பேறிய தலைவி யின் சிவந்த கண்முன் குறைகிடந்த ஊடலின் மேல் விளைந்த இதனாலும் சிவப் பேறியது; பல தொகுதியாக நீராடற்கு வந்த மகளிர் காண அவ ளோடு பகை மிகுந்து தன் மாலையைப்பிடுங்கி மிக வெகுண்டாள்; ஆறும் அவள் மேனியின் அழகை உட்கொண்டு பாராட்டிய காதலன், தன் சந்தனச் சேறாடிய மேனி நிலத்தைத் தீண்டும்படி விழுந்து வணங்கினான்; அவன் சிரத்தைமிதித்துப் பின்னும் வெகுளி தீராமையால் ஊடினாள்; சிவந்த புனலா டுகின்ற நேரத்து இவ்வாறெல்லாம் நிகழ்ந்தது.

பாலை ஏழினையுமுடைய புரி நரம்பின் கண் இனிய இசையைத் தருகின்ற யாழும் மிடற்றுப் பாடலுங் கூட, குழல் அவற்றின் சுருதியை அளந்து நிற்ப, முழவு எழுந்து ஆர்ப்ப அரங்கே றிய தலைக்கோல் மகளிரும் பாணரும் ஆடலைத் தொடங்கினர்; அவ்வாரவாரத்தோடு சேர்ந்த கரை

யைப் பொருது இழியும் பெரிய நீரின் ஒலி அஞ்சத் தக்க இடியோடு கூடிய மழை முழக்கத்தை ஒக்கும் திருமருத முன் றுறைக்கண் சேரும்; அந்நீரிடத்து மகளிரும் மைந்தரும் இன்பம் நுகர்வர்; அவர்கள் மாலைகளை யாங்கு நின் தலைக்கண் புனையும் வையாய்! இன்று நின்னிடத்து ஆடி நீங்காத இப் பயனைப் பெற்றார்போல என்றும் நின்னால் யாம் பெறும் பயனைப் பாராட்டி விடிகின்ற பொழுதின் தன்மையை அடைந்து மகிழ்வோமாக.

—மையோடக் கோவனர்

## 8.

### செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

பூமியிடத்துள்ள துளசியின் மலர்ந்த மலரினைற் றொடுத்த மாலையையும், அளவற்ற செல்வத்தினையுமுடைய கருடனை மேலே எழுதிய கொடியையுமுடைய திருமாலும், இடப ஊர்தியுடைய சிவபெருமானும் உந்தியங் கமலத்திற் றோன்றிய பிரமனும், அவ்விடத்தினின்றும் தோன்றி, உலகின் இருளை அகற்றும் ஆதித்தர் பன்னிருவரும், மருத்துவராகிய அசுவினி தேவர் இருவரும், சிவபெருமான் பெயரால் அறியப் படும் உருத்திரர் பதினொருவரும், நல்ல திசைகளைக் காக்கின்ற திக்குப் பாலகர் எண்மரும், இவரும் இவரொழிந்த பிறருமாகிய அமரரும், அவுணரும், தெய்வ முனிவரும் நின்னைக் காண்பது காரணமாக

மண்மிசை வந்து உறையும் இடம் திருப்பரங்குன்றம். இவ்வியல்பினால் பரங்குன்று நினது பழைய இடமாகிய இமயக் குன்றத்தை ஒக்கும். அவ்விமயக் குன்றின் கண் சிறப்பெய்தி நின்னை ஈன்ற நிரைத்த இதழுடைய தாமரையினது மின்போலும் பூங்கொத்துக்கள் உதிராததும் வற்றாததுமாகிய பொய்கை ஒக்கும், நினது குன்றின் அருவி தங்கும் ஒழுங்குபட்ட சுனை.

முதல்வ! நின் குன்றிடத்து முகிலின் முழக்கம் நின் யானை முழங்கும் ஓசையை ஒக்கும். முகிலின் முழக்கத்தைக் கேட்ட கோழி அஞ்சிக் குன்று எதிரொலிக்கும்படி கூவும். மதமிக்க யானை அக்குரற்கு மாறுமாறாகப் பிளிறும். அவை மலைக் குகைகளிடத்து எதிரொலிக்கும். ஐந்து துளையான வங்கியத்தும், யாழிடத்தும் பிறந்த இசைச்சுருதியை ஒப்ப, ஒரே நிறமுடைய கூட்டமாகச் செல்லும் விருப்புடைய வண்டுகள் ஆர்த்தன. கொன்றை, சரம்போன்ற பூங்கொத்துக்களை மலர்ந்தன. மணமுடைய மலர்ந்த காந்தட்பூ, இடமெல்லாம் நாறின. நன்றாக மலர்ந்த பன்மலர்கள் தேன் ஒழுக அந்நாற்றங்களோடு தென்றல் வீசும் தலைமையுடையவாய் இருந்தன. மதுரைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் இடையேயுள்ள வழி இவ்வாறிருந்தது.

குன்றைப் பிளந்து விளங்குகின்றவேலோய்! கூடலிடத்து மன்றலில் கொட்டப்படும் முரசின் ஆரவாரம், காற்றால் ஏறுண்ட கடலின் கொந்

தளிப்புப் போலவும், இந்திரனது இடி எனவும் அதிர்ந்தது. நின் குன்றிடத்து முழக்கம் அவ்வொலிக்கு மாறாக ஒலிக்கும்.

தலைவியரால் தூதாக ஏவப்பட்டுத் தலைவரோடு மீண்ட வண்டின் கூட்டத்தின் ஒலி, அத்தலைவியர் காதலை மதுரை மூதூர்க்கண் அரவமாக்கிற்று.

மாவடுவின் வகிரை வென்ற கண்ணும், மாந்தளிர் போன்ற மேனியும், நீண்ட மூங்கில்போன்ற பணைத்த மிருதுவாகிய தோளும், வளை அணிந்த வருமாகிய இளம் மகளிரின் வரைகடந்த காம இன்பத்தைத் தலைவரோடு பெரிய பொழிலாகிய பாயலின்கண் கூடிப் பெறுவர். இக்களவியற் புணர்ச்சியையும், காதலையுமுடைய *அடியுறை மகளிர், மைந்தர் அகலத்தை அகலாத நல்ல புணர்ச்சியையும் பூவின்கட் திரியும் அகன்றில்போல அகலாது அவர் விரும்பியவாறு பெறுவர். இவ்வாறு தருஞ்சிறப்புடையது தண்பரங்குன்று.

[தலைமகள் இவ்வாறு மகளிர்மேல் வைத்து இன்ப மிகுதி கூறியதைப் பொறாத தலைமகள் புலந்து கூறுகின்றாள்.]

**தலைவி** :—இப்பொழுது நீ மிகவும் அயலார் நாற்றத்தை நாறா நின்றாய்; அவரோடு கூடுதற்கு அவ்விடத்தே நீ காலை போய் மாலை வருதல் அடிக்கடி நிகழா நின்றது; இனி பழைய சத்தியத்தைத் தவிர்.

---

*நின்தொழுபராகிய மகளிர்.

**தலைவன்** :—இனிய மணலையுடைய வையைக் கரைக் கண்ணுள்ள பொழிலானை, குன்றத்துச் சாரலானை, பார்ப்பாரானை, முனியாதே. மலரை உண்ட கண்ணாய், நீ கூறியது எனக்கு இயைவ தன்று இந்நாற்றம் பரங்குன்றத்துக் கனியினும் மலரினும் பயின்ற காற்றுச் சீத்தடித்து வந்தது; ஆதலால் மிகவும் துனியாய் ஆகுக.

**தலைவி** :—நீ உன் சூளை விடு.

**தோழி** :—*எடா! யானென்று சொல்லுமளவும் நில்லு நில்லு. நின் சூளைப் பின்னை கூறு. அமைதி யுடையோர் பெற்ற மிகத் தகுதி யில்லாத மகனே! இவள் தாய்க்கு ஒரு பெண், (இச்சத்தியத்தால் உனக்குத் தீமை வரின் இவள் இறந்து படுவள்.)

**தலைவன்** :—மை உண்ட கண்ணும் விளங்கு கின்ற ஆபரணங்களுடையவளும் என்றூட்கு அரியளோ? அரியளாவது நீ சொல்லுதற்கு முன் யான் அறிந்திலேன்; இதனைப்பார்; புனல் வாரடிக்கின்ற வையையின் மணலைத் தொட்டேன்.

**தோழி** :—மணத்தைத் தருகின்ற செவ்வேளின் தண்ணிய பரங் குன்றத்தின் அடியைத் தொட் டேன் என்றாய்; கேளிரை ஒத்த மணலோடு நட்பும் இத்தன்மைத்தோ? அது கிடக்க, ஏழுலகையும் ஆளுகின்ற திருவரைமேல் அன்பு அருளைச் செய் யத் தக்கது; நீதலைவியிடத்து அருள் செய்யாது

* எடா வென்பது தோழன் முன்னிலைப் பெயர் (திவாகரம்.)

செய்ததாக, அருளுடைய முருகன் மீது ஆணை செய்யின் நின்னை அருளில்லாத வருத்தத்துடன் அவ்வேல் மெய்யாக வருத்தும்; அதுவேயன்றிப்பார்ப்பார் அடியைத் தொடினும், வெற்றிவேலோன் ஊர்ந்து செல்லும் மயிலையும் அவன் நிழலையும் நோக்கி அவை மீது சூளுறற்க; குறவன் மகள்மீது ஆணை கூறுகின்ற ஏடா! அதனையும் கூறல்; ஐயனே! சூளுறல் வேண்டின் வணங்கப்படும் குன்றோடு வையைக் கேற்ற அழகிய மணலைச் சூளுறு தொழி.

**தலைவன்** :—நேரிழாய்! யார் பிரிய, யார் வர, யார் வினவ, யாரது விடை உண்டாகின்றது? அது கருதாது, நீருரைக்கும் சூளின் தன்மை கடிது என்றாய்; தடாகத்தின் கண்ணுறுள்ள செய்தற் பூவையும், கமழ்கின்ற (சிவந்த) நறவம் பூவின் இதழை ஒத்த கண்ணையும், ஒள்ளிய நுதலையும், முல்லை முகையை வென்று முத்தை ஒத்திருக்கும் வெள்ளிய பற்களையுமுடைய எனது தலைவி [illegible] குற்றம் நனவு மன்று கனவுமன்று; (தோழிக்குக் கூறுகின்றான்) என் மாட்டுக் குற்றத்துக் குறிப்பு ஒன்றும் இல்லாதிருக்கவும் அவள் [illegible] காரணம் என் ஒழுக்க நெறியாக நீ [illegible], யான் செய்தது பொய்ச் சூள் [illegible] முருகன் என்னைத் துயரிற்படும்படி வருத்தஞ் செய்வான்; அவன் அவ்வாறு செய்யாமல் நீ சென்று அவள் அடியிற் பணிந்து ஆற்றுவிப்பாயாக; (பின் தன் ஏவல் இளைஞரை (நோக்கி) இவ்வுரையை

எல்லார்க்கும் அறிவிம்மின்; முருகன் தாளை யாவரும் தொழும் பரங்குன்றத்தின்கட் சென்று மலர் தூவி ஏற்றுதும்; அவியை ஊட்டுதும்; பாணித்தாளத்தையுடைய பாட்டைப் பாடுவேம்; *கிணை ஒலியை எழுவிப்பேம்.

**தோழி**:—ஏடா என்னைச் சமாதானஞ் செய்க என்றாய்; அதனாலே நின் பொய் ஆணையாகிய குற்றம் நின்னைப் பற்றுதலை யாம் அறிந்தேம்; யமனது வலிமையும் இகழும் ஆற்றலுமுடைய முருகன் நின்னை மாறுபடுத்தற்கு முன்னே, யான் வளை சோரும்படி கையை விட்டுப் பேசாது நிற்பேன்; தலைவி நாவைக் கை விரலினாற் தொட்டு முகத்தைக் கவிழ்த்துப் பெரிய சூளுறுதலால் வரும் தீமையை அஞ்சி அருளினால் ஆற்றி யிருப்பாள்; அயல் மகளிர் பால் நீ பலகாலும் செல்லும்போது அதனைப் பலகாலும் காண்பாய்.

இவ்வாறு கூறிப் பின்னும் தலைமகளிர் யாவரும் இவ்வாறே செய்வரென அவரது செய்தி கூறுகின்றாள்.

மதுரைக்கும் திருப்பரங் குன்றத்துக்கும் இடையே உள்ள வழி காற்று மோதுதலால் உயர்ந்த மலையிடத்திற் பெய்து ஓடும் மழைநீராற் செழித்து வளர்ந்த இளமரச் சோலைகளை யுடையது; மரங்களில் பறிக்கப் பறிக்கத் தொலையாத

*உடுக்கை.

மலர்கள் விரிந்திருக்கும்; பொய்கைகள் நீர் நிறைந்திருக்கும்; பொழில்களிடத்துக் குளிர்ந்த மணல் பரந்திருக்கும்; முருகனைப் பூசைபுரிந்து வழிபடுதற்கு இத்தண்ணிய நிழலுடைய வழியால் மகளிர் கூட்டமாகச் செல்வர்; சந்தனமும், புகைப்பனவும், காற்றால் அவியாத விளக்கிற்கு வேண்டிய நெய்யும், நாறுகின்ற பூவும், இசையுடைய முழவும், மணியும், பாசமும், அயிலும், குடாரியும், மயிற்கொடியும் பிறவும் ஏந்திச் சென்று திருப்பரங்குன்றிலுறையும் முருகனது அடிகளைத் தொழுவர். தொழுது சிலர், யாம் கனவில் எங்காதலனைத் தொட்டது பொய்யாகாமல் கனவின்கண் தலைவரை எய்தி வையைப் புதுப்புனல் ஆடுதல் வேண்டுமென வரம் வேண்டுவர்; சிலர், எம் வயிறு கருவுற வேண்டுமெனப் பொருள்களை நேர்ந்தனர்; சிலர் எங்கணவர் வியக்கத்தக்க அமரை வெல்ல வேண்டுமென அருச்சித்தனர். இவ்வாறெல்லாம் பாடுவார் ஆடுவோரின் தாளங்களும், மலையிடத்து எழும் எதிரொலியுமாகிய இவை யெல்லாம் ஒன்று சேர்ந்து ஒலித்தன.

கூரிய எயிறுடைய பாவையர் சுனையிற் குதித்தே பாய்ந்தாடினர். அவர்களது கண்களும், முகமும், பாதமும் தாமரைப் பூப்போன்றன; அவர்கள் தோள்மீது பொருந்தியசேடியரது கரங்களும் கயத்தில் மலர்ந்த தாமரைப் பூப்போன்றன; தனங்களும் தாமரை முகையை ஒத்தன; இவையினை

யார் பொய்கையிடத்துப் பாய்ந்தாடுதலின் அங்கு மலர்ந்த தாமரை மலர்களுக்கும் இவர்கள் உறுப்புகளாகிய தாமரை மலர்களுக்கும் வேற்றுமை தோன்றாதாயிற்று. அம்மடவார் முலைப்பூணோடு கணவர்தம் மார்பணிகள் மயங்கின. சிவந்த தளிர் போன்ற மேனியுடைய அம்மடவார் அரிவையர் செய்த அமிர்தத்தை ஒத்த காமத்தை உண்டாக்கும் கள்ளுடனே மடையர் சமைத்த மகிழ்ச்சிதரும் கள்ளையும் உண்டு தங்கணவர் மார்பிடத்துத் தோன்றிய வருத்தத்தைத் தீர்த்தனர்.

பரங்குன்றமே! தம்முட்பிரியாத மகளிரும், மைந்தரும், பிறரும், வரம் வேண்டுவோரும் கூடி நின்று, மணிமிடற்றண்ணற்கு மாசில்லாத உமையம்மை தந்த கடம்பின்கீழ் அமரும் முருகனது அழகிய கோயிலை வழிபட, செல்வத்துடன் மண் வருத்த மழை வறண்டதாயினும் அருவி பெருகி மிகும் செல்வம் நினக்கு நிலை பெறுவதாக.

— ஆசிரியர் நல்லந்துவனார்

## 9

## செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

வடதிசைக்கண் உயர்ந்து பெரிய நிலம் அசையாதபடி நிற்கும் பெரிய சிகரத்தையுடைய இமையமலை, அழகு மிகுந்த தெய்வச் சாதிக்குத் தலைவனாகிய இந்திரனால் காக்கப்படும். அம்மலையிடத்தே,

அமரருலகினினின்றும் அயனால் வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையின் வேகத்தை மலர்ந்து விழுகின்ற பூவைப்போல சடாபாரத்திலே தாங்கிய சிவபெருமானுக்கு, தெய்வ முனிவர்கள் உடன்படக் கார்த்திகைப் பெண்களிடத்திற் பிறந்தோய்! இமைக்கின்ற கரிய கண்களையுடைய வள்ளியின் தோளை நீ களவின்கண் மணந்தாய். மணந்த அன்று, ஆயிரங் கண்களையுடைய இந்திரன் மகளாகிய தேவசேனையின் கண், முதுவேனில் கார்காலமாகி மழை பெய்தாற்போலப், பரங்குன்றின் கண் நீராகிய மழையைப் பெய்தது.

நான்மறைப் பொருளை விரித்து ஆய்ந்த [illegible]யின் நல்ல புகழை விளக்கும் புலவீர்! சிறந்ததொரு பொருளைக் கேண்மின். காமத்துட் சிறந்தது காதலையுடைய காமம்; அஃதாவது: மெய்யுற்றறியாதா ரிருவர் அன்பொத்து ஊழ்வயத்தராய்த் தாமே மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சி. இனி அன்பு ஒவ்வாத கற்புப் புலத்தலாற் சிறந்தது. அப்புலவிதான் * வாயில் வேண்டி நிற்றல், வாயில் பெறுதல் முதலியன. ஆவன அவனது பரத்தைமையான் வருவன. அவ்வாறு பெற்றுப் புணரும் புணர்ச்சி, தலைவிக்குப் பாங்காயினோர் கேட்டு வருந்தலுறாப் பரத்தையர் தம் மனைக்கண் அவர் ஆற்றாப் [illegible]. [illegible]

* தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தபொழுது, தலைவி அவனை உள்ளேவிடாது மறுக்க அவன் பலவாறு இரந்து வேண்டுவான் பின் ஒருவாறு இரங்கிய தலைவி அவனை உள்ளே விடுவாள்

புணர்ச்சி இன்ப இயல்பானன்றி ஊடலால் உண்டாவது. கற்பொழுக்கம் போலத் தலைவர் பிரிதலறியாத களவிற் புணர்ச்சியுடைய மகளிர் தலைவரோடு மாறுகொண்டு துனிக்கும் குற்ற முடையாரன்று. இப்புணர்ச்சியை வேண்டுகின்ற பொருளிலக்கணத்தையுடைய தமிழை ஆராயாத தலைவர்களொழுக்கத்தைக் கொள்ளமாட்டார்.

இனி அக்களவிற் புணர்ச்சியுடைமையான் வள்ளி சிறந்தவாறும், அத்தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்தவாறும் கூறுகின்றார். சந்தன மரங்களுடைய பழைய கரையைப் பெயர்த்து வையைப் புனல் கொண்டுவந்த வயிரிய சந்தனக் கட்டையின் புகை சூழ்ந்த மாலையுடைய மார்பின் கண், விளங்குகின்ற முத்துமாலை அழகுபெறத் தன்னோடு கலத்தற்கு வரும் முருகவேளை தேவசேனை தொழுதாள்; தொழுது, வஞ்சகனே! வாழ்க. நின்னை அறியாது அகப்பட்ட மகளிர் தன்மை இனி மழையை வேண்டி வருந்துவார் தன்மையை ஒக்கும்; ஆதலால் அம்மகளிரே தலையுடையராவரல்லது நீ தலையுடையை அல்லை; நின்னை எய்தும் திருவுடையார் மெய்யன்றே மற்றுப் பொருந்தி அருளாயும் நினைக்கின்றாய்; ஆதலால் நின் சிறந்த கள்ளத்தை உண்மையாக்கடவதோ என்று முருகக்கடவுளைக் கையாற் கட்டிச் சொன்னாள்; சொல்லியபின் வள்ளி காரணமாக உண்டான புலவியால் நீங்கினாள். முருகவேள் தேவசேனையைக்

சென்றணுகி, தன் தலைமாலை அவள் அழகிய பாதங்
களிற் றோயும்படி வணங்கினர். அதனால் புலவி
தீர்ந்த தேவசேனை 'வருந்தல்' என்று சொல்லித்
தன் மார்பை அளித்தாள். அப்போது வள்ளி,
'இனி அவனைக் குறுகாதே' என்று அவன் கையை
மிக இறுகப்பிடித்தாள்; பிடித்துத் தான் அணிந்த
மாலையைக் கோலாகக் கொண்டு அடித்தாள்.
அதனைக்கண்டு ஒருவர் மயில் ஒருவர் மயிலோடு
உறவாடிற்று; இருவர் கிளிகளும் தம்முள் மழலை
வார்த்தைகளை மிழற்றின. வெறியாட்டை விரும்பும்
முருகனது குன்றிடத்துள்ள வள்ளியின் வண்டு
தேவசேனை கொண்டைமீது இருந்த வண்டைமேற்
சென்று பாய்ந்தது. அதனைக்கண்டு தேவசேனை
யின் பாங்கியர் வள்ளி பாங்கியரோடு மாறுபட்ட
னர்; மாறுபட்டு மாலைகளை வீசி அடித்தனர்;
கண்ணிகளை ஓங்கித்தடுமாறினர்; மார்பை அழகு
செய்யும் கொங்கையின் கச்சுகளை, அடிக்கும் கருவி
களாகக் கொண்டு அடித்தனர்; மாலைகளையும் வரிப்
பந்தையும் கொண்டெறிந்தனர். பேதமையுடைய
மெல்லிய நோக்கம் வெகுளியால் வேறுபட்டோரும்
ஊதவளையும் இடையுடையோருமாகிய, தேவ
சேனையின் தோழியர் நெருங்கிப் போரைச்செய்
தனர். அதனைக்கண்டு வள்ளியின் பாங்கியராகிய
மெல்லிய மயிலின் சாயலையுடையோர், தோட்டிப்
புண்ணால் மென்மை அடைந்த தலையுடைய மதம்
நாறுகின்ற களிற்றின் இயல்பை அடைந்தனர்;
வேகமுடைய குதிரைகளின் கதியைத் தம்மிடத்தே

கொண்டனர்; தேர் நிரைகள் போல வடிகயிற்றைத் தெரிந்துகொண்டு வந்தனர்; மார்பிலே பொருந்தும்படி வில்லை வளைத்து அம்பைச் செலுத்தும் வில் வீரரதும் வாள் வீரரதும் நிலைமையையும் அடைந்தனர். இந்திரன் மகளுடைய பாங்கியர் அதற்கு அஞ்சி வாட்டமூம்பு நெருங்கி யிருக்கும் மார்புடைய முருகனைச் சூழ்ந்து கொண்டு சுனையிடத்தே மூழ்கி ஆடினர். அப்பாறை யிடத்துத் தேனையுண்ட வண்டாய் நின்று யாழ் போன்ற இனிய பாடலைப் பாடினர்; கொண்டையுடைய மயிலாய்த் தோகை விரித்தாடினர்; குயில்களாய் நின்று கூவினர்; வருத்த மடைந்தனர்; குறிஞ்சி நில மக்களாகிய குறவர் பெற்ற வீரம பொருந்திய கொடிச்சியர் திருந்திய போரைச் செய்த விடம் பரங்குன்று ஆகலின் அவ்விடம் வெற்றி வேலுடைய முருகனுக்கு ஒத்தது.

கொடிய சூரபன்மாவாகிய மாமரத்தை அறுத்து அழித்து வேலாற் பொரும் போரையுடையாய்! நின் குன்றின் மிசை ஆடல் பயின்றாரை ஆடல் பயின்றார் வெல்வர்; பாடல் பயின்றாரைப் பாணர் வெல்வர்; வலிய போரில் வல்லாரைப் போர் வல்லார் வெல்வர்; ஒழிந்த கல்வியுடையாரைக் கல்வியுடையார் வெல்வர். வெவ்விய புதுப் புனலை ஏற்ற தடாகம் போலும், சுனைப்பக்கத்து வெற்றிக்கொடி உயர்ந்து நின்றது. நினக்கு ஏற்ற வேலினை! வென்றுயர்ந்த கொடியால் வெற்றி

யமைந்தனை. கற்பு நெறியுடைய தேவியாரது அன்பு பொருந்திய ஊடலுரிமையை விரும்பும் பண்புடைய குமர! யாம் நின்னை வணங்கி வாழ்த்தி வேண்டிக் கொள்கின்றேம்.

—மருத்துவ னல்லச்சுதனர்

# 10

## வையை

[இது பருவங்கண்டு, வருவேனென்று வற்புறுத்திச் சென்ற தலைவர் வார்த்தைக்கு மாறாக வருந்திய தலைமகளது ஆற்றாமை கண்டு தோழி தூது விடச், சென்ற பாணன் பாசறைக்கண் தலைமகற்குப் பருவ வரவும் வையை நீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியும் கூறியது.]

மாலைக்காலத்தே மலையிடத்துப் பெய்த மழையின் மிகுந்த வெள்ளத்தால் நிரம்பிய வையைப் புதுப்புனல், எல்லை காணமுடியாத கடலைக் கூடுவதற்கு வேகத்தோடு சென்றது. செல்லுமிடத்து, நிலவுலகில் பசி முதலிய துன்பங்கள் சுருங்கும்படி விரிந்த பல பூக்கள் நெருங்கின போர்வையுடன் பெரிய மணலை மூடிப் பாய்ந்தது; வரியுடைய வண்டு விரும்புகின்றதும், மொட்டு விரிகின்ற கிளைகளுடைய மாந்தளிர்களுடன் வாழையிலைகளும் தோயும்படி சென்றது. இவ்வாறு பல ஆரவாரத்தோடு கரையைக் காக்கின்ற காவலரை அழைத்தற்குப் பறை கொட்டும்படி சென்றது.

அப்புனலிடத்தே நெருங்கி ஆடுதலை விரும்பிய மக்கள், கூட்டமாகச் சென்றனர். நூல் போன்ற நொய்த இடையும், மயில் போன்ற சாயலுமுடைய மாதர், இரண்டு முதல் முப்பத்திரு கோவை யீருகவுள்ள வடங்களை இறுக்கிக் கட்டினர். அரக்கு நீரை உள்இழுத்து வீசும் துருத்திகள் எல்லாவற் றையும், முத்துப் போலும் பனி நீரோடு அளவிய சந்தனத்துடனே பெட்டியில் வைத்து மூடிச்சென் றனர்; பொங்குகின்ற *பிடரி மயிருடையவும் தத்து தலால் மேலிருத்தற் கரியவுமாகிய பரியும், மிக உயர்ந்தவாயினும் மேலிருத்தற்கு இனிய பிடியும், பெயர் சொல்லி அழைக்கப்படும் எருது பூண்ட அழகிய வண்டியும் கோவேறு கழுதையும், ஆராய்ந்து குதிரை பூட்டிய சகடமும், தண்டார்ந்த சிவிகையும் ஆகிய இவற்றில் அவர்கள் வந்து மொய்த்து விரைந்தேறிச் சென்றனர்.

முகைபோன்ற பருவத்தோரும், மணந் தங் கிய புது மலர் விரிந்தாலென்ன பருவத்தாருமாகிய இளையரும், விரவிய நரையுடையோரும், வெரு நரையோருமாகிய முதியவரும் என்ற இவ்விருதிற மாந்தரும், கற்புடை மகளிரும், பரத்தையரும், இம் மாந்தர்க்கும் மகளிர்க்கும் பாங்காயினரும் ஆகிய இவர்களெல்லாம், தாளத்துக்கு ஒலிக் கின்ற வாத்தியங்களது மெல்லிய நடையைப் போலப் பிற பகுதியிலுள்ளாரோடு ஆற்றெ

* பரிகளையும் பிடிகளையும் ஊர்தல் பரத்தையர்க்கே இயல்பு.

திரே நடந்து சென்று அதன் உயர்ந்த கரையைச் சேர்ந்தனர். அலர்வாய்விழ்ந்தன்ன பருவத்தினர் நீரின் அழகைக் கண்டு நின்றனர்; நிரைத்த மாடங்களிற் சென்று தங்கினர்; மைந்தரோடு பொரும் விளையாட்டுப் போருக்கு ஆயத்தமாக நிரையாக நின்றனர், முன்னே செல்லும் காலாட் படைகள் போற் சென்று தாக்கினர்; நறுமாற்றத் தையுடைய பூ மிகுந்த ஆற்றிடைக் குறையைக் குறுகிக் காதலர் ஆகத்தைத் தழுவினர்; யாமத்து ஊடற்குறையாகிய இனிய கலவி விருப்பந்தரும் ஊடற்றேனை நுகர்ந்தனர்; அவ்வூடலைக் காமமாகிய குந்தாலி உடைத்தலால் ஊடலைத் துறந்து அமளி சேர்ந்தனர். ஏனைய முகைப் பருவத்து மகளிர் பூவின் மேம்பாட்டை நாடிவந்துவிழும் வண்டுபோலக் காதற்கணவர் தம்மை வந்து எதிர்ப்பட்டுப் புணர் தற் பொருட்டு, நீராடல் குறித்துத் தமக்குக் காவலாகிய பாட்டியரைத் தப்பி அவர் தடுத்தலையுங் கடந்துபோய், நாவாயது வரவை எதிர் கொள்வார் போல விருப்பமுற்று நிற்பர்; யான் விரும்பும் வையைப் புனலை ஆடுமிடத்துக் கூடலின் கண் இவ்வாறெல்லாம் நிகழும்.

ஒரு வீரமுடைய களிறு தனக்குப் பாங்காகிய பிடியைக் கண்டு காமத்தால் மயங்கி மெலிந்தது; மைந்தர் நடத்தவும் நடவாது அழகிய நிலையுடைய மாடத்தை அணைந்து நின்றது; அப்பிடியும் களிற்றின் மேற்சென்ற விருப்பால் மயங்கி மேலி

ருக்கும் மகளிரோடு நடத்தல் சுருங்கி அம்மாடத் தயலே சென்றது; அவ் அம்புலிமாடத்துப் பண்ணிவைத்த புலியைக் கண்டதும் அதனை மெய் வேங்கை யென்றும் அது களிற்றைப் பாயுமென்றும் கருதி அஞ்சிற்று. அஞ்சிய மேகத்தை யொத்த அப்பிடி, பாகர் செய்யும் தொழிலைக் கொளாது மீதிருக்கும் மகளிர் நடுங்கும் படி வெருண்டது. அதனைக் கண்டு ஆற்றது பிளிறுகின்ற களிறு, கோட்டியைக் கடந்து சிதைத் தது. உடனே அம்மைந்தர் அது இடிபோன்ற முழக்கத்தைச் செறியுமாறு அதனைப் புலிமுக மாடத் தினின்றும் பெயர்த்துப், பிடி சிதையாமல் அணை வித்து அம்மகளிர் நடுக்கத்தைக் களைந்தனர். அத்தோற்றம், பாயும், கயிறும், மரக்கூட்டங்களும் முறிந்து சிதையப் புகாநின்ற மரக்கலத்தைத் திசையறிந்து கலங்களை ஓட்டும் மாலுமி திருத்தி அகத்தே இருந்தோரின் நடுக்கங் களைந்த தொக் கும். வையை நீர் விழவின்கண் மைந்தரும், மகளிரும், விலங்குகளும் ஒத்த அன்பின வாயின. ஐயனே! அது நின் மாட்டில்லையாயிற்று.

பெரிய கோடுடைய யாழின்கூறு, மிடற்றுப் பாடல் ஆடல் முதலியன திண்மையை அறிக்க அறிந்த அணியுடைய மகளிரும் மைந்தரும் கூடுதற் குச் செல்லுகின்ற காதல் இருவரிடத்தும் ஒத்திருப் பதும் பொற்பிற்காரணமாக ஒருவரின் ஒருவர் முற்படு தலை நாணிக்கூடாது மெலிவுற்றனர். அவ்வியல்பு, மாறுபாடுடைய மன்னர் சேனையிரண்டும் தம்முட்

4

கண்ணுற்றுப் பொருது நொந்து சமாதானப் படுதற்கு மனத்தான் இயைந்து வைத்தும் முன்னுகையார் உடம்பட்டதென்னும் வார்த்தை பிறக்குமென்று அஞ்சிப் பின்னும் நோவோடு நின்ற ஒழுக்கத்தை ஒக்கும்.

காமமிக்கெழு அதனாலாகிய கண்ணாரின் களிப்புப் புலப்படா நிற்கவும் ஊரினுள்ளாரை மிகவு மஞ்சி அதனை ஒளிப்பாரது நிலைமை, கள்ளை மறைத்துண்டார் அதனாலுண்டாகிய நடுக்கத்தைப் பிறர் கண்டு அலர் தூற்றுவரென்னும் அச்சத்தால் மறைத்த தன்மையை ஒத்தது.

இவ்வாறு கள்ளையும் காமத்தையும் பொருந்துதலால் இவ் வையைப் புனல் கரையற்ற இன்பத்தைத் தருமியல் பிற்றாய் நின்றது.

புனலாடி இளைத்த மகளிர் தெப்பங்களை விட்டுக் கரை அடைந்து, ஈரம் புலர்த்தற்குப் பொழில்களில் அகிற்கட்டைகளை எரித்தனர். அவ்வகிற் புகை அவர் முலை முகடுகளில் மெழுகிய கலவைக் குழம்பு பெருகினாற்போலப் பரந்து திசை யாங்கும் பரந்தது.

தலைக்கோலம் புனைந்து அழகு விளங்கும் நெற்றியுடைய சிலர், முகிற்படலத்தினின்றும் விளங்கும் பூரண சந்திரன்போன்ற பாத்திரத்தை உறையினின்றும் எடுத்துக் கள்ளை நிறையவார்த்திச் சர்ப்ப முறைகின்ற நிறை மதிபோற் கரத்திற்றாங்கிச் சந்திரனின் நிறைந்த கலையை உண்ணவும்

தெய்வ மகளிர் போன்றனர்; சிலர், தம்மை வெண்பட்டாற் போர்ப்பர்; சிலர், பூத்தொழி லுடைய வெண்பட்டைக் கூந்தல் மேற்சுற்றி முறுக்குவர்; சிலர், குங்குமச்சேறு, சேருகச் செய்த அகிற்சாந்து, பலவகைக் கப்பூரம் முதலிய இவற்றின் உட்புறம் சேர்ந்து கலக்கும்படி அழுக் கில்லாத குழவியால் அவியுடைய குண்டத்தின் கண் அழல்போன்று நிறம் பேர அரைப்பர்; சிலர் பொன்னாற் செய்த *நந்து நண்டு இறவு வாளை முதலியவற்றை நீரின்கண் விடுவர்.

சிலர், இரப்போர் 'ஈ' என்று சொல்வதற்கு முன்பே அறத்தை விரும்பி அவர் விரும்பும் தானங்களைப் பண்ணினர்; கழுவிய நீல மணி போன்ற கருண்ட நெளிந்த மயிரிடத்தே வண்டு ஒலிக்க வாச நீரூட்டி நீராடுவர்; எண்ணெய் போகும்படி விரும்பப்படும் வாசப் பொடிகளைப் பிசைவர்; மாலையும் சாந்தும் கத்தூரியும் அழகு பெறும்படி நீருக்கு ஊட்டுவர். இத்தன்மைய ராகிய ஒண்டொடியார்க்குப் புனலாடலால் நிறம் ஒளிபெற்று நீரால் ஏறுண்ட முகமும் முலைக்கண் ணும் மிகச் சிவந்தன; காதலரோடு அன்னவாகிய விளையாட்டை அயர்ந்திருக்கவும் பின்னும் புனலின் மேற் செல்கின்ற அவர் கண்கள் வண்டு மொய்க் கின்ற$ ஐந்து மணத்தினால் மாட்சிமைப்பட்ட காம

* சங்கு.

$ முல்லை, அசோகு, நீலம், மா, தாமரை.

பாணத்தினது அரத்தாற் கூர்மையிடப்பட்ட வாய் போன்றன.

புனல் ஆடி மெலியாத மைந்தர் வாழைத்தண்டைப் பிடித்து மிதந்து சென்றனர்; திரையினும் நுரையினும் தாழும் பூவின் தாதைத்தூவினர்; விசையுடைய ஓடத்தின் கண் ஏறி அதனை விரைந்து செல்லும் புனல்வழியே செலுத்தினர்; புனல் விளையாடி உண்டான மெய்வருத்தத்தால், பெண்கள் இழைத்த சிற்றில்லில் அட்ட சிறு சோற்றைத்தாம் உண்டற்கு ஏற்றனர்; முன் இடுவாராய் பின் மறுப்பாராகிய மகளிருடைய பந்தும் கழங்கும் பிறவுமாகியவற்றைக் கொண்டோடினர்; ஓடி அவரறிந்து வாங்கச் சென்றுழி எட்டாமல் நீருட் பாய்ந்தனர்; பின் அவர் தம்முள் மாறுபட்டு வேலானும் வாளானும் பொய்ப் போரிழைத்தனர். அதனால் யானைகள் போர் செய்து உழக்கிய களம் போல் இனிய தன்மையுடைய புனல் தெளிவின்றாயிற்று.

மாலைக்காலத்தே சந்திரன் பெரிய இருளைப் போக்கிற்று. நீராடச் சென்றோர் வீடு திரும்புவாராயினர்; மகளிர் புதிய இயல்பினையுடைய அணிகளை நீக்கி மலர்ந்த பூக்களைச் சூடினர்; தோளணி, தோடு, மற்றுமுள்ள ஒளிவிடும் ஆபரணங்கள், முத்துவடம் ஆகிய இவற்றை அணிந்து பாடுதற்குரிய பாடல், பல்லாண்டு முதலாகிய பரவுதலும்

பாடினார். ஆடுதற்குரியாரது ஆடலும் அதற்குப் பொருந்தின *சீருடன் கூடிய தாளமும், அவர் கூந்தலின்மீது வந்து ஊதும் தேனீக்களது செறிந்த பாடலுமாகிய ஓசை எல்லாவற்றோடும் எழுகின்ற பண்ணொலியைக் கேட்ட ஊரிடத்துள்ள வண்டுகள் தம்மினத்தின் ஆர்ப்பு என்று கருதி அவ்விடத்தே வரும்; வந்து மலர்ந்தமாலை வேய்ந்த அம்மகளிரின் மயிர்க் கற்றைக்கண் உள்ள தேனைக் கொள்ளை கொண்டு ஊத எல்லோரும் தென் திசையை நோக்கி மீள்வர். அப்போது ஊரி டத்தே மாடங்களினின்றும் தெறித்த பன்னீர் மணத்தோடு கூடிக் காற்றுத்திரியஅதனோடு மாடத் துள் நின்று புறப்பட்டுப் பரக்கும் அகிற்புகை மலை யிற் பூம் கொடிகளிடத்துத் தங்கிப் பின் மேல் மண்டி. ஏறும் வெள் பனி ஆவி போன்றது. துன்பமறியாது தானே வருகின்ற புனற்கு விருந்து செய்யும் கூடற்கண் குற்றமின்றி இசைக் கின்ற இசைக்குரிமை யுடையராகிய பாணரும் கூத்தரும் மேவிய கூட்டத்தோடு ஒருங்கே ஏத்தித் தொழுதற் பொருட்டு, இன்மையாற் பற்றப்பட்ட புலவரது ஏற்ற கை நிறையப் பொன்னைச் சொரி யும் வழுதியைப் போல வையை, வயலிடத்தே பொன்னைப் பரப்புந் தொழிலை மாறுதொழிக.

—கரும்பிள்ளைப் பூதனார்.

சீர் = தாளவறுதி.

## 11

### வையை

[இது, வரைவு நெருங்குதலை வேண்டிய தோழி கன்னிப் பருவத்துத் தைந்நீராடத் தவம் தலைப்பட்டேமென வையையை நோக்கித் தலைமகன் கேட்பச் சொல்லியது.]

* இடபவீதி, மிதுனவீதி, மேடவீதி என வீதிகள் மூன்று. ஒவ்வொரு வீதிக்கும் ஒன்பது நாட்களுண்டு.

வெள்ளி இடபத்தைச் சேரும். செவ்வாய் மேடத்தைச் சேரும். புதன் மிதுனத்தைச் சேரும். கார்த்திகை உச்சமாக விடிதல் உண்டாகும். வியாழம், சனியின் இரண்டு வீடுகளாகிய மகர கும்பங்களுக்கு அப்பாலுள்ள மீனத்தைச் சேரும். இயமனைத் தமையனாக வுடைய சனி தனுவுக்குப் பின்னுள்ள மகரத்தைச் சேரும். அக் காலத்து இராகு மதியை மறைக்கும்.

இவ்வாறு கோள்கள் நிலை பெறுகின்ற ஆவணி மாதத்து நிறையுவாக் காலமாகிய அவிட்டத்தில் **அகத்தியன்** என்னும் மீன் உயர்ந்த தன்

---

*இடபவீதி.—கன்னி, துலாம், மீனம், மேட மென்பன. மிதுனவீதி.—தேள், வில்லு, மகரம், கும்பம் என்பன. மேடவீதி.—இடபம், மிதுனம், கற்கடகம், சிங்கம் என்பன. ஒரு இராசி ஒன்பது இரண்டேகால் நாளாதலின் (நன்நான்கு இராசியாகிய) ஒரு வீதிக்கு ஒன்பது நாளாயின.

இடத்தைக் கடந்து மிதுனத்தைப் பொருந்தும். முறுகின வெயிலுடைய வேனிலுக்குப் பின் வருகின்ற அக் கார் காலத்து உயர்ந்த சைல மலைக்கண் மழை பொழியும். அந் நீர் வரவால் நிறைந்து ஓடுகின்ற வையைப் புனல், வரை ஒத்த புன்னாகத்தினதும், கரையிடத் தோங்கிய சுர புன்னையினதும், வண்டுகள் ஒலிக்கின்ற சண்பக நிரைகளினதும், செவ்வலரியினதும், கூவிளையினதும், கிளையுடைய வேங்கை மரத்தினதும் மலர்களையும், சுனையிடத்துள்ள காற்று முறுக்கவிழ்க்கும் நீலம், மூங்கில் வளரும் சோலையிடத்துள்ள மலர் ஆகிய இவற்றையும், சாரலிற் சோலைக் கண்ணே கொண்டு வந்து சொரியும். அவற்றைத் திரைகள் தள்ளிக் கொண்டு வந்து மருதத் துறைக் கண்ணே தரும். அத் துறை, பூவினை ஆராய்ந்து பறிக்கும் கோலினையுடைய வலிய குடிகள், நிறமுடைய பூக்களைக் கொண்டு வந்து குவிக்கும் பூ மண்டலமோ? அரிய மலர்ப் போர்வையும், முத்துக்களை அணிந்த மலையாகிய தனங்களும், திரையும் நுரையும் குமிழியும் இனிய மணமுமுடைய நிலமாதின் அல்குற்கு அணியும் சீலையோ? கள்ளை வாய் கொண்டு பருகும் அவள் மிடறோ? என்று சொல்லும் படியிருந்தது.

[வரைவு மலிந்த தோழி வையையின் சிறப்பை இதுவரையுங் கூறி, இனி அதனைக் கண்டார் கூறியதாகக் கூறுகின்றாள்.]

வையைப் புனல், பிறைதோன்றிய நாள் தொடங்கி நாடோறும் ஒரு கலை வளர்கின்ற முற்

பக்கம்போல, நாளுக்கு நாள் பெருகும்; நிலவு எங்கும் பரந்தாற்போல மலைச்சாரல் தொடங்கியுள்ள நிலத்தில் நீரைப் பரப்பி உலகுக்குப் பயனளிக்கும். அமரர்க்கு உணவாகிய அம்மதி நிறைவு சுருங்கிறாற்போல நீர் வரவு சுருங்குமிடத்தும், எட்டாம் பக்கத்து மதியளவு ஆதலன்றி, இருள் உவாவினைப் போல நீர் நேராகக் குறைதலையுடைய நாளைக் காண்கின்றாரில்லை. நெடுந்தூரத்தைக் கடந்து வந்தவையாய்! பெருகின காலத்துப் புதிய அழகையன்றி வற்றின நாளையின் நின் அழகையும் உலகம்பெற இந்நீர் மிகுதியைத் தணிந்து ஏருக.

வையாய்! மறையிற் புணர்ந்த மைந்தரும் மாமயிலன்னாரும் காமத்தாற்சிறப்புடைய அக்களவொழுக்கத்தை விட்டு, இனிவந்த கற்பொழுக்கத்தை யுற்றாற்போல, நீபிறந்த இடமாகிய மலையை விட்டு இருத்தற்குரிய கடற்றலைவன் இல்லத்து நீ தனியே சேறல் இளிவரவாகும்; ஆதலால் ஆண்டு செல்லற்பாலையல்ல, எனக் கண்டோர் கூறினர்.

எல்லை அறநீண்டு அகன்ற கண்ணுடையாளை, உடன் கொண்டு வேல் துணையாகச் சென்ற தலைவனை, அவள் சுற்றத்தினர் இடைச் சுரத்துச் சென்று பொருதாற்போல, வெற்றியுடைய மதுரையார் இடையே புகுந்து நீராடுதற்கு ஏற்ற ஆறு இதுவாகும். கிடை முதலிய வற்றாற் செய்த

வாள் குந்தம் முதலிய படைகளைத் தாங்கிய நீராடு மகளிரதும் மைந்தரதும் தேர்களை மைந்தரும் மகளிருமாகிய பாகர்கள் ஆழ்ந்த வெள்ளத்துள் ஊர்ந்து சென்றனர். கணுக்களுடைய அழகிய மூங்கிற் தண்டால் தெப்பங்களை நீரிடத்து ஓட்டு வோரை அரக்கு நீர் நிரப்பிய வட்டால் எறி வோரும், சுழற்றி மாலையினால் எறிவோரை அழுத்த மான கொம்பு நீரால் தெறிப்போருமாகிய காத லர். இவ்வையைப் புனலிடத்து காணுக்கினைப்பர்.

[இனி வேனிற்காலத்தில் நீராடற் சிறப்பினைக் கூறுகின்றார்.]

மைந்தர், நீராடற்கமைந்த அழகிய அகலத்து, அலங்காரத்துக் கேற்ற ஆபரணங்களையும் தண் ணிய மாலையையு முடையராயிருப்பர். அவர்க ளோடு, நல்ல வளர்கின்ற புண்ணியத்தைச் செய்த நாகரைப்போல இடைவிடாது இறுகப் புணர்தற்கு மகளிர் இனிய இளமதுவை நுகர்வர்; நுகர்தலால் களிமிகுந்து, தாள மமைந்த பாடலின்பத்தால் தஞ்செவியை நிறைப்பர்; அவர்களின் (ஆடவரும் மகளிரும்) அழகாகிய மதுவை ஒருவரின் ஒருவர் கண் உண்ணும். இவ்வாறு மகளிரும் மைந்தரும் நீராடிக் களிக்கும் வையை ஆறு, உம்பர் உறையும் ஒளியுடைய வானத்தின்கண் அவர் ஊர்ந்து திரியும் விமானங்களைக் காட்டும் நீரோட்டத்தையுடையது.

வையாய்! இவ்வாறு கார் காலத்திற் கலங்கி வேனிற்காலத்துத் தெளிதலான இத்தன்மை எக்

காலத்தும் ஒத்திருப்பதில்லை. கார் காலத்து அதிர்கின்ற இடி நீங்கப் பனி மிகுதலால் நடுங்குதலுடைய முன்பனிப் பருவம் வந்தது. ஞாயிறு வெம்மையைச் செய்யாத கடை மாரியுடையது மார்கழி மாதம்; அம் மாதத்துத் திங்கள் மறுவோடு நிறைந்த திருவாதிரைநாளில் ஆகமங்களை உணர்ந்த பூசகர் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழா எடுப்பர்; அவர்கள் எடுக்கும் விழா நடைபெறவும், புரிநூலையுடைய அந்தணர் பொன்னைத் தானமாகப் பெறவும் நிலம் மழையாற் குளிர்வதாக.

வையாய்! சடங்கறிந்த முது பார்ப்பனிமார் நோற்கு முறைமை காட்டக் கன்னியர் அம்பாவாயாடுவர். பனியுடைய வைகறைக் கண் குளிர்ந்த வாடை வீசுதலால் அம்மகளிர், நின்கண் உறையும் அந்தணரது வேதநெறியால் வளர்ந்த ஆடி எரிகின்ற அணலைப் பேணுவர்; அதனிடத்துத் தம் ஈர உடையைப் புலர்த்துவர். வையாய்! அவ்வந்தணர் அவ்வழற்கட் கொடுக்கும் மடை நினக்கு வாய்ப்புடைத்தாயிருந்தது.

ஓலை பிடித்த இளம் புலவரது வருணனை போல, எழுந்து காமக் குறிப்பில்லாத விளையாட்டைச் செய்கின்ற மகளிர், அக்கினி மத்தியில் புலனை அடக்கிச் செய்யுந் தவத்தை முன் அடுத்தடுத்துச் செய்ததனாலோ? தாயருகாக நின்று தவமாகிய தைந் நீராடலை நின்கட் பெற்றது. மகளிர்

ஆடுமிடத்தே ஒருத்தி, மூங்கிலின் அழகைவென்ற தோளையும் நீலத்தைச் செவித்தாராகவுமுடைய ஒரு மாதைப் பார்த்தாள்; அவள் குறிப்பறிந்த அம்மாது அப்பொழுது குளிர்ந்த அசோகிலாது சாய்ந்த தளிரைத் தன் காதில் அணிந்தாள். பரந்த குழலையுடைய அவள் அணிந்த நீலம் அசோகந்தளிரின் செம்மையாம் இளவெயில் போல் விளங்கிற்று.

குழையணிந்த தன் அழகிய காதிடத்தே குவளையைச் செருகி நான்கு விழி படைத்தாள் ஒருத்தியைக் கண்டு மற்றொருத்தி நெற்றியில் சிவந்த திலதமிட்டுக் கொற்றவையின் கோலங் கொண்டாள்.

பவழ வளையைக் கையிற் செறித்தாளொருத்தியைக் கண்ட ஒருத்தி குவளைப் பூவின் மரகதம் போன்ற பச்சைத் தண்டைக்கொண்டு தன் கையை அலங்கரித்தாள். குளிரிப் பூவால் மாலை தொடுத்தாளை வில்லென்பாள்போல வேறொருத்தி மல்லிகை மாலைக்கண் நெய்தலை விரவித்தொடுத்தாள்.

[இனி அவர் கருத்தும் அவர் வேண்டிக்கோடலும் கூறுகின்றார்.]

முன் வையையுள் வாழைத் தண்டைத் தழுவி ஆடி நின்றவன், ஒருத்தியைக் கண்டான். கண்ட பொழுதில் அவன் நெஞ்சு அழிந்தது. அதனைப் புனல் அவன் கையை வலித்தது; நெடுந்தூரம்

வலித்து அவன் விரும்பின அவளிடத்துக் கொண்டு செல்லாது வேறிடத்துக் கொண்டு சென்றது. அதனைக் கண்டு அவள் ஆயத்துடன் நில்லாது அவனைத் தொடர்ந்தாள். அவள் அன்புடைமையை அறியாத தாய் மகளைத் தனியே செல்லாது ஆயத்தோடு சேர்ந்து நிற்கும்படி சத்தமிட்டாள். கரையைப் பொருதுவரும் சிவந்த கார்காலத்து நீர் வரவு இவ்வாறு ஆரவார முறும்படியிருந்தது.

அந்நீர் போலாது யாம் தைந்நீராடுதற்கு நிறந்தெளிந்தாய்; ஆதலால் நீநக்காய், எனக் கண்டோர் கூறினர்.

கழுத்திலே இட்டகையை எடாத காதலரைத் தழுவப் பெருமை பெறும்படி வரம் வேண்டுதும் என்பாரும், பூவில் வீழ்கின்ற வண்டு போலப் புலம்பிப் பிரியாது கணவரும் யாமும் பொருந்தியிருப் போமென வேண்டி நிற்பாரும், எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் எனப்படாமல் நிலையுடைய இளமையை இத் தவந்தரச் செல்வத்தோடும் சுற்றத்தோடும் நிலைபெறவேண்டும் என வேண்டி நிற்பாருமாக மகளிர் பலவாறு வரம் வேண்டி நின்றனர்.

[இனி ஒருவன் உவந்தவற்றைக் கூறுகின்றான்.]

இக்காரிகை வருத்துகின்ற தெய்வம் இவளைக் காண்மின். உவள் காம பண்டாரமும் காமன் படையுமாயிருத்தலைப் பார்மின்; நெய் பூசிய நீலமணிபோன்ற கூந்தலையுடைய மகளிர் விலக்க

நில்லாது அவர் கூந்தலிடத்துள்ள பூவை ஊதும் வண்டினங்களின் யாழை ஒத்த ஓசையுடைய பாட்டைக் கேண்மின். அப்பாட்டின் பொருள் விளங்காதிருக்க இனிதாகப் பாடுகின்ற சுரும்பினது இசையைக் கேண்மின். தான் வீழ்ந்த பூவின் ஒடுங்கிய தாளை மூசிக்க நெஞ்சுடனே முன்னே எறிந்து பின்னும் எதிர்த்து ஒலித்துவரும் ஒரு தும்பியின் காய்சினத்தின் இயல்பைக் காண்மின் என்று ஒருவன் காட்டாநின்றான்.

[இங்ஙனம் ஆக நீராடல் கூறி மேல் தலைமகள் கேட்ப வையையை நோக்கிக் கூறுகின்றாள்.]

இனிய இயல்பால் மாட்சிமைப்பட்ட தேர்ச்சி பொருந்திப் பரிபாடலாற் சிறப்பிக்கப்பட்ட நறுநீர் வையாய்! நின்னீர்மையையும் நறுநுதலையுமுடைய மகட்டன்மைமேம்பட்ட கன்னிமைமுதிராத கைக்கிளைக்காமத்தைத் தருகின்ற நின்னிடத்து இத்தைந் நீராடலை முற்பிறப்பிற் செய்த தவத்தாலே இப்பிறப்பிற் பெற்றேம்; அதனையாவரும் நயக்கத்தக்க நின்னீர் நிறைவின் கண்ணேமறு பிறப்பினும் பெறுவேமாக.

—ஆசிரியர் நல்லந்துவனார்.

## 12

### வையை

[இது, கார்ப்பருவத்து வையை விழாச் சிறப்பின் பல்வேறு வகைப்பட்ட இன்பங்கூறி, இவ் வகைப்பட்ட இன்பத்தையுடைய நின்னையும் நினைத்திலரென வையையை நோக்கித் தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது.]

காற்றுவானிடத்தே மோதி அடித்தது. வானம் மின்னலையும் இடியையும் மாறிமாறிப் பரப்பா நின்றது. சையமலையிடத்தும் அதன் கிளைகளிடத்தும் இடைவிடாது மழை பெய்தது. அதன் சாரலிடத்தே உதிர்ந்த மலர்கள் நீர்மேல் மிதந்தன. கரைக்கண் நின்ற நாகம், அகில், வாழை, ஞெமை சந்தனம் முதலியன வருந்தத் தகரத்தையும் ஞாழலையும் தேவதாரத்தையும் ஏந்திக் கொண்டுவருகின்ற வையையின் காற்றுப்போன்ற வரவு, ஒரு கடல் உயர்ந்து வருவது போன்றது.

தன்மேல் மலரைப் பரப்பிக்கொண்டு வரும் வையை யாறு மதுரையின் மதிலைப் பொரு மெனக்கேட்ட பெண்கள், புதுப்புனல் ஆடுதற்கு மின்போல் விளங்கும் ஆபரணங்களை அணிந்தனர்; பொற்றகட்டாற் செய்த பூவைச் சூடினர்; சந்தனச் சாந்தை மாற்றி அகிற்புகையினலாகிய சாந்தைப் பூசினர். கரிய கூந்தலை வாரிமுடிந்தனர்; வெட்டிவேரால் கட்டிய பலவகை மலரைச் சூடினர்; நீராடுதற்குரிய புடைவைகளை அலங்

கரித்துடுத்தனர். கட்டிய கொக்கி அழகு செய் யும் வடங்களைப் பூண்டனர்; வாச எண்ணெய்பூசி வெண்கற்பொடியாற் சுற்றம் நிரும்படி கண்ணின் அடியை விளக்கினர்; இயற்கை அழகையும் செயற்கை அழகையும் கலவியால் வந்த நிறத்தை யும் (ஆடியில்) விளங்க நோக்கி, (தக்கோலம் இல வங்கம் கப்பூரம் சாதிக்காய் முதலிய) பஞ்சவாசத் தோடிடித்த பாக்கை வாய்க்கண் இட்டனர்; இரண்டு அந்தலையும் முட்டுவாய் தெரியாது இருக் கும்படி செய்த *ஆணியிடும் வளையுடன் செறிக் கும் தோள்வளையுடையாரயும், கட்டுவடத்தோடு கால்மோதிரம் உடையாராயும், தேனொழுகும் மாலை யணிந்தவராயும், அருமையான நாறும்வாசனை தட வியவர்களாயும் குதிரைகள் மீதும் யானைகள் மீதும் இவர்ந்து அன்னப் பெடைகள் போற் சென்றனர்; ஒலிக்கின்ற மணிகள் பூண்ட தேர்களிற் பூட்டிய குதிரைகளை முட்கோலால் உறுத்தி ஓட்டினர். இவ்வாறு மகளிர் விரைந்து விரைந்து சென்று கூடவும் கூடலாரெல்லோரும் புகழவும் வையை நீர் வந்தது. அதனைக் காண்பவரிட்டம் அதன் கரையை ஒப்பவந்தது. வெள்ளம் கரைக்கு மேல் ஏறிக் காண்பவர்களின் காதல் வெள்ளத்தை யெல்லாம் பருகியது போலப் பெருகிற்று.

[இவ்வளவும் பாணன் தலைமகனுக்குப் பருவ வரவும் வையை நீர் வரவும் கூறியது.]

---

*ஓட்டாணி

இனி வையையின் வரவைக் காண வருவார்க்கு, முன் வந்து கண்டவர் தாம் கேட்டவற்றைக் கூறுகின்ற தன்மையானும் காட்டுகின்ற வாற்றானும் விழா வணியின்பம் கூறப்படுகின்றது.

துறைமுன் நெருங்கி அணியாக நின்றவர் மொழிகின்ற மொழி ஒன்றை யொன்று ஒவ்வாது பல பல வாய் ஒரே நேரத்தெழுந்தது. அவற்றை எல்லாம் தெரியக் கேட்க வல்லார் யார்? அவை கேட்டல் கூடா; அவற்றுள் யாம் கேட்டன சிற்சில.

வங்கியத்தின் இசை எழுந்தது; முழவு மத்தரி தடாரி தண்ணுமை முதலிய ஓசையுடைய தாளத்தை அளந்து ஆடும் அரிவையர் தமது நேரிய இறையுடைய முன் கைகளைத் தூக்கித் தாளத்தை அளத்தலைக் காண்மின்.

ஒருத்தி நாணுக் குறையில்லாத குலமகளாக யிருக்கச் சிறந்த கணவன் தன் தோள் நலத்தை யுண்டு பரத்தையிற் பிரிந்தான். அது கண்டு அவள் அவனோடு புலந்து இப்போது புனல் வெள்ளத்திலே அவனோடு பிடியின் முதுகில் ஏறினள். தோழீ! அந்நங்கை நாணுடையளல்லளோ? என்று சிலர் கூறினர். பூங்கொம்பை ஒப்பாளது குவிந்தமுலையை, அரங்கின் கண் நின்று நோக்கி நின்றவன் ஒட்டை மனத்தன்; திண்மையில்லாதான் என வேறு சிலர் கூறினர். சொரிந்த தூஉம்சொன்ன தூஉம் அறியாது நிறை அழிந்து நிறம் மாறுபட்டு, வழியே செல்லும் ஒருவன் பின் இவள் நெஞ்சைப் போக்கினள்; அன்பு மிகுந்தால் நிறையழிதற்கு அஞ்சி, அதன்

மிகுதியை (மிகுந்த அன்பை) விடக்கடவேம் என்பர் சிலர். இக்காரிகை பூண்ட முத்தாரத்தினது அழகை உவன் நோக்கி இம் மாலைகளுக்கேற்றன இவை என நெருங்கிய முலைகளைப்பார்த்தான். அதற்கு அவள் நாணினளல்லள் என்றனர் சிலர்.

அணங்கை ஒப்பான ஒருத்தி அமிர்தத்தை ஒத்த நோக்கால் ஒருத்தியின் கணவனைப்பார்த்தாள். அது பொறாத அவன் மனைவி அவனைத் தன் மாலையைக் கோலாகக் கொண்டு அடித்துத் தன் மார்பின் வடத்தை வாங்கி அவன் கையை இறுகக் கட்டினாள். கட்டி நீ பிழையை யுடையை என்றனள். அது கண்ட அவன் தொழுது தாய் செய்த பிழையாதெனக் கேட்கும் தூயவனைக் காண்மின். ஒருத்தி நின்னைப் பார்த்தாளென்று ஒருவள் தன் கணவனை நோக்கிக் கூறினாள். அவன் அவளைப்பார்த்து இவளை யானறியேனென்று இரந்து மெய்யாகிய சத்தியஞ் செய்தான்; அதனை அவள் பொய்ச்சூளென்று சொன்னாள். அஞ்ஞான்று அவள் ஊடல் தீர்க்கும் அவனைக் கூடாது, அச்சூள் காரணமாக மிக்கும் வெகுண்டும் புலந்தாள்; புலந்து பூ நாற்றத்தையும் அழகையுமுடைய அரக்கு நீர் நிரப்பிய வட்டை அவன் வலிய மார்பில் எறிந்தாள். வேல் போன்ற கண் பட்ட புண்ணில் இரத்தம் சொரிவதுபோல அரக்கு நீர் சொரியப் பகையின்றி உள்ளஞ் சோர்ந்து ஆற்றாய் நேர் நில்லாது நீங்கி அவளை வணங்கினான்;

தான் அவன் வலிய மார்பில் எறிந்ததால் விழுந் தானென்றஞ்சி மயங்கினாள்; உடன் முன்னுள்ள துனி நீங்கித்தன் கணவன் ஆகத்தைச் சேர்ந் தாள்; இவ்வாறு சேர்வித்தலை வையைப் புனல் இன்றேயன்றி என்றும் செய்திடும்; இதனைக்காண் மின், என்று சிலர் காட்டுவாராயினர்.

மல்லிகை, முல்லை, மணங்கமழுஞ் சண்பகம், அல்லி, செங்கழுநீர், தாமரை, ஆம்பல், குல்லை, மகிழ், குருக்கத்தி, பாதிரி, நல்ல பூங்கொத்துடைய நாகம், நறவு, சுரபுன்னை முதலியவற்றின் பூக்கள் கமழும் இருகரைகளிலும் கலங்கிய நீர் ஏறித் தெளிந்து செறிந்த இருண்ட கரிய பாறைமீது தங்கி நின்று மேலுலகத்தின் அழகைப் பிரதிபலித்துக் காட்டும். இருள் நீங்கும் வைகறைக் காலையில் வையை நீர் கலங்கி இரத்தத்தின் தன்மையுடையதாயிருக் கும். போரை வெல்லும் பாண்டியனது இவ்வகை யான ஆற்றிடத்தே ஒருத்தி, மாட்சிமைப்பட்ட காதணி போலத் தூங்கும்படி சிவந்த அசோகின் புது மலரைக் காதிடத்தே செருகினாள். செருகி முறுக்குவிட்ட மலரைத் தாங்கும் பூங்கொடிபோல வளைந்து அடிமேல் அடிவைத்து நடந்து வளை யணிந்த முன்கையாலே தன் கூந்தலிற் கண்ணியை அழகுண்டாகும்படி திருத்தினாள். அந் நல்லவள் செய்த குறிப்புகளால் இவ்விடத்து நிற்பவன் அவள் கண வனாயிருந்தான்; அதனைக் காண்மின் என்று சிலர் காட்டினர்.

துகிலின்கட் சேர்ந்த பூத்தொழில் போலப் புனலின் கண் நீரினையுடைய* மணி நிறைந்தது. புனலாடுவோர் வார்த்தையின் ஆரவாரம் அப்புன லைப் போன்று மதுரையிடத்து மிகுந்தது. அவர் களின் அழகு அவர்கள் உடைகளிடத்தே மிகுந் தது அவ்வழகு மிகுந்து பிற அழகோடு மாறு கொண்டது. அவர் மார்பினின்று அழிந்துவீழ்ந்த தகரச் சாந்தால் மணல் சேறுந் தன்மைப்பட்டது. துகிலினின்று பொசியும் நீரினால் கரைகள் மழை பெய்தது போன்றன. புனல் விழாவால் வானுல கம் சிறப் பொழிந்தது.

வையாய்! நின்னால் ஆரவாரமுடைய மூதூ ரின் வாழ்வார்க்கு இன்பமும் கவினும் நல்ல பல வகைப்பட்டன வாயின; அதனால், இவ்வுலகு அகன்ற இடத்தை யுடைத்தாயினும் நின்புகழை அடக்கமாட்டாது.

—நல்வழுதியார்

## 13

### திருமால்

### கடவுள் வாழ்த்து

நின் பூத் தொழிலுடைய பீதாம்பர உடை, நீலவரைக் கட்பரந்த இருளைக் கெடுக்கும் இள ஞாயிற்றினது அழகமைந்தது. அழகு செய்யப் பட்ட முடி நீலவரையை ஊரும் அஞ் ஞாயிற்றின்

*நீராடினார் ஆபரணங்களினின்றும் உதிர்ந்தமணி

எழில் போன்றது. அந் நீலவரை யினின்று இழியும் பொன்னையும் மணிகளையுமுடைய அருவியின் நிறத்தை ஒத்தது நின்தார். நின் அழகிய கொடி கருடனை எழுதப் பெற்றது. விண்ணின் கண் நின்று அருளுகின்ற நிறை மதியை ஒக்கக்குளிர்ந்த காத்தற்றொழிலைக் கொண்ட வரும், அசுரரை வருத்தும் சக்கரப் படையைத் தரித்த வருமாகிய மாலே!

கார்கால மேகத்தின் இருபாலும் விளங்குகின்ற சந்திர சூரியரைப் போல நின் கைகளிடத்தே சக்கரமும், சங்கும் ஒளிரும். மின்னற் கூட்டம் போல் ஒளி விடுகின்ற பொன்னாரத் தோடு, அருவி பாய்வது போன்ற முத்தார மணிந்த நின் திருமார்பைத் தொழுவோர்க்கு நீ உறையும் வைகுண்டமும் உரிமையாதல் உடைத்து.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் முதலியபுலன்களும் நீ; அவற்றை நுகரும்பொறிகளும் நீ; புலன்களுள் ஓசை அறியப்படும் விசும்பு நீ; ஓசையும் ஊறும்அறியப்படும் காற்று நீ; ஓசையும் ஊறும் ஒளியும் அறியப்படும் நெருப்பு நீ; இவற்றோடு சுவையும் அறியப்படும் நீரும் நீ; சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தும் அறியப்படும் நிலனும் நீ. ஆதலால் *மூலப்பகுதியும் அறனும் அநாதியான காலமும் ஆகாயமும் காற்றோடு

* சாத்துவீகம், இராசதம், தாமதம் என்னும் குணங்கள் மூன்றும் தம்முள் ஒத்த நிலைமையது.

கனலுங்கூடிய இம்மூவேழுலகத்து உயிர்களெல் லாம் நின்னிடத்தன வாயின.

தன் நீலநிறத்தோடு மாறுபடும் வெண்மை நிறத் தினையுடைய பாற்கடல் நடுவே மின்னலை ஒத்து விளங்குகின்ற, சுடர்விடும் மணியோடு விரிந்த ஆயிரந் தலையுடைய படுக்கையிற் துயிலும் துளவங்கூடிய அறிதுயிலோன் எனவும், மிக்க ஆரவாரமும் வீரமும் பொருந்துகின்ற மிக்க படை யுடனே, ஒழுக்கத்தைக் கடந்து வரும் பகைவருயி ரைப் போக்கும் வெற்றிமிகுந்த வலியும், ஓசை மிகுந்து நிலத்தை உழும் வளைந்த வாயுடைய கலப் பைப் படையுமுடைய பல தேவனெனவும், பூமி அசையும்படி எடுத்தற்கு முற்றாகச் சாய்த்த பொன் இதழுடைய அழகிய கிம்புரிபூண்ட மருப்பினை யுடைய பன்றி எனவும் மூன்றுருவாகப் பிரிந்து ஒன்றாய் விளங்கும் ஒருவன் நீ. பரந்த சிறகும் பல நிறமுமுடைய கருடனைக் கொடியாகக் கொண்ட சலியாத செல்வன் நீ. ஓதுதற் கினிய வேதம் துதிக் கின்ற புள் உயர்ந்த கொடியுடைய செல்வ! நல்ல புகழுடைய மேகம், காயாம்பூ, கடல், இருள், நீல மணி என்னும் ஐந்தையும் ஒப்ப விளங்கும் அழகிய மேனியுடையை.

நின் அருளுடைய மொழி வலம்புரி முழக்கை யும் வேத முழக்கையும் ஒக்கும்; நின்முனிவிடத்து எழும் மொழி வான்முழக்கை ஒக்கும். நின் தாள் நிழல் இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் மூன்று

காலக் கூறுபாடுகளையுங் கடந்தன. நின்னை ஏத்து மன்பர் இருவினையு முடையரல்லர். காத்தலாகிய ஒரு வினைக்கண் மேவுகின்ற உள்ளத்தினை! இலையின் மேல் உயர்ந்து மலர்ந்த பெரிய இதழ் உடைய தாமரைமலர், நின் அடியும், கையும், கண்ணும், வாயும், தொடியும், உந்தியும், தோளணி வலயமும், தாளும், தோளும் கழுத்துமாகும் பெருமை யுடையை; மார்பும் அல்குலும் மனமும் பெரியை; அன்பர் குறையைக் கேட்டு அறியும் அறிவும், அறிந்து அருள்புரியும் நுண்மையு முடையை; வேள்வியை விரும்புதலோடு போரிடத் துக் கொடுமையை; நீங்காத வலியினையும், பொரா திருக்கவே சிவந்தகண்ணையும், சக்கரப்படை யாற்செய்யும் வெல்லும் போரையுமுடைய செல்வ! நிறத்தால் நெருப்பையொத்த வெட்சிமலரை இடையே வைத்துக் கட்டின நறிய துழபமாலையை அணிந்த மார்புடையோய்! பண்டும் பண்டும் யாம்செய்த தவப்பயனால் இத்தன்மையை எனநினைந்து நின்னடியைக் கையாற் றொழுது பலகாலும் அடுத்து இறைஞ்சி வாழ்த்துகின்றேம்; யாம்மென்மேலும் ஆசைப்படுகின்ற பொருள் இதுவேயாம்.

—நல்லெழுநியார்

# 14

## செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

[பருவங்கண்டழிந்த தலைமகள் கேட்பச் செவ் வேளைப் பரவுவாளாய், இப்பருவத்தே தலைமகள் வருமென்பது படத் தோழி வற்புறுத்தியது.]

மேகம் பெரிய மழைபொழிந்தது. அம்மிகுந்த நீரான் நிறைந்த சுனைகளிடத்துள்ள பூமலர்ந்தன. தண்ணிய நறிய கடப்பமலரின் தாதை அழகிய வண்டுகள் பண்போன்ற ஒலியுடன் ஊதின. நெடிய மலையிடத்துள்ள மூங்கில்கள் வழிபடுகின்ற மகளி ரின் அசைகின்ற தோள்களை ஒத்தன. வாகை யின் ஒள்ளிய பூப் போன்ற சூட்டையுடைய மயில் களது குரல் மணந்து பிரிந்தோரைப் பிரிந்து நீடி யாது வாரு மென்பவர்சொற்கள் போன்று ஒலித் தது. கொன்றையின் புதிய மலர்கள் பொன் தார் போன்று விளங்கின. அழகையுடைய மகளிர்க்கு அது தீர்த்தற் பொருட்டுத் தாயர் புலி புலி என்று சொல்லுமாறு வேங்கையின் மலர்கள் பெரிய பாறையிடத்தே பரந்தன. நீரின் அயலே செருக்கி வளர்ந்த நெருங்கிய முகையுடைய காந்தளின் நீண்ட கொத்தின் அலர்ந்த பெரிய இதழ் நிரை யாகத் தோன்றும். கொடிகளிடத்து மலர்ந்த பவளம்போற் சிவந்த பூக்கள் பரந்து கிடத்தலால் நின் குன்று கார் காலத்தன்மை மிக்கது.

மிகுந்த போரிடத்துக் சூரபன்மாவைக் கிளை யோடு அழித்த சுடர் விடுகின்ற படையுடையோய்! கறையில்லாத கார் காலத்து வெண்மேகம் எழுந் தாலன்ன நறிய அகில் முதலிய வற்றின் புகை யை விரும்பினேய்! ஆறுமுகத்தைவும் பன்னி ரண்டு தோள்களையு முடையாய்! அழகாற் பிறமகளி ரை வென்ற வெற்றியுடைய வள்ளியது நலத்தை நயந்தோய்! பிரிந்த கணவர் மீண்டு வந்து புணர்ந்து பின் நீங்கா துறைதற் பொருட்டு வரம் வேண்டி மகளிர்யாழை மீட்டு நின்னைப் பாடுகின்ற பாட்டை விரும்பினேய்! பிறந்த ஞான்றே நின்னை எதிர்த்து இந்திரன் முதலாகிய தேவர்கள் அஞ் சிய சிறப்புடையோய்! இருபிறப்பினையும் அப்பிறப் பான் வந்த இரண்டு நாமத்தினையும் இளகிய நெஞ் சத்தினையும் ஒப்பில்லாத புகழினையு முடைய அந் தணரது வைதிக ஒழுக்கத்தினைப் பொருந்தினேய்! நின்னையாங்கள் மேவி அடுத்தடுத்து வழிப்படுவ தன் பயன், அவ்வழிபாடுகள் மென் மேலும் நின் புகழினும் பல வாகுதலே யாகும்

—கேசவனர்

# 15

## திருமால்

### கடவுள் வாழ்த்து

அறிவின் எல்லையால் அறியப் படாத புகழுடனே நில எல்லையைக் காட்டுகின்ற தன்மை நீங்காததும், கெடாததுமா யுள்ளது சக்கரவாள மலை. இம்மலை முதலாகப், பழைய புகழுடைய புலவர் ஆராய்ந்து பாடிக் கொண்டாடிய நெடிய குன்றுகளைச் சிறப்பு வகையாற் கூறாது, பொது வகையாற் பல வென்றுரைக்கின், அப் பலவற்றுள்ளும், நிலத்துள்ளோரைப் பசிவெம்மை ஆற்றி நிறை பயன்களெல்லா வற்றையும் எப்பொழுதும் அவர் பெறப் பயன்படு குன்றுகள் சிலவாகும். அச்சிலவற்றுள்ளும் தெய்வங்கள் தாமாக விரும்பும் மலரையுடைய அகன்ற நீர் நிலைகளுடனே மேகங்கள் படியும் சிகரமுடைய சிறந்த மலைக் கூட்டங்கள் சில. அக்குல வரைகள் சில வற்றினும் கல்லென அறையும் கடலும்கானலும் போல் வேறு வேறாகிய நிறத்தினையும், பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல வேறுபடாத தொழிலினையுமுடைய மாயோனையும் அவன் தமையனாகிய பல தேவனையும் தாங்கும் நீண்ட நிலைமையினையுடைய புகழாலமைந்த* பெரிய குன்றம் சிறந்தது.

அரவு மெல்லிய தலையாற் கவிக்கின்ற தம் முன்னோன் மார்பிடத்து வெண்கடப்பமலர்த்

* திருமாலிருஞ் சோலை

தாரின் பெரிய அழகு தோன்றும். அசைகின்ற அருவி மிக ஆர்த்து இழிதலால், சிலம்பாறு அழகு செய்யும் இவ்வியக்கத்தக்க திருமாலிருஞ் சோலை என்னும் பெயருக்கு ஏற்ப அதன்பெருமை பூமியின் கண் நன்ருகப் பரக்கும். மகளிரும் மைந்தரும் தாம் விரும்புங் காமத்தை வித்தி விளைக்கும் யாமத்தின் இயல்புடையது அக்குன்றம். அதனிடத்து அந்நிலைபெற்ற குளிர்ச்சியுடைய இள வெயில் சூழ அதனிடையே இருள் வளர்தலை ஒப்பப் பீதாம்பரத்தையுடையோன் தம்முன்னேனுகிய பல தேவனேடு அமர்ந்திருப்பன். மாந்தரே! அத்தோற்றத்தை நினைமின்.

இனி அம்மலையது சிறப்பைக் கேண்மின் சுனைகள்தோறும் நீலம் மலர்ந்திருக்கும்.* சுனை சூழ்ந்த அசோகின் கிளைகளெல்லாம் மலர்கள் விரிந்திருக்கும். காய்கனிகளோடு நிறம் மாறுபட வேங்கை பூங்கொத்துகளை மலர்த்தும். இவ்வியல்புகளால் அம்மலை மாயோனை ஒத்த இனிய நிலைமையுடையது. பெரிய ஆரவாரமுடைய உலகில் பெரிய குன்று என்றும் புகழ்பரந்த அவ்வளவு பழைதாய் இயல்கின்ற புகழையுடையது. அது, காண்போரின் பாவத்தை அறுக்கும் வழிபடு தெய்வம். ஆதலின், சென்று அவனைத் தொழமாட்டாதீர்! அதனைக் கண்டு பணிமின்.

---

*நீல மலரைச் சூழ்ந்த அசோகமலர் அவன் பொன்புனை உடைக்கு ஒப்பு; குன்றத்துக் காய் கனியோடு மாறுபட மலர்ந்த வேங்கை அவன் மணிமுடிக்கு ஒப்பு.

அங்கு மகவைத் தழுவியிருக்கும் மந்தி ஒரு சிகரத்தினின்று ஒரு சிகரத்திற்கு பாயும் ; மூங்கில்கள் நெருங்கிய முல்லை, மகளிர் கற்பு ஒழுக்கத்தைக் காட்டும். தேன்பொருந்திய துளசியுடைய கரிய குன்றம் அனையை ! ஒளிபோன்ற ஒரு குழை உடையை ! கருடன் இருக்கின்ற அழகிய கொடியுடையோய்! கூரிய வளைந்த கலப்பையை யுடையை ! கோபமிக்க தண்டேந்தினை ; வலம்புரியோடு வெற்றிநேமியுடையை. வரிசிலையோடு வெற்றி அம்பினையுடையை ; புகர் நிறமுடைய சுழல் படையுடையை. இவ் இருங்குன்றத்தின் அடியில் உறைதல் எய்துக என்று எமக்கு, அழகிய சீரையும் புனிதத்தையுமுடைய வேதம் அவர் பெருமையை இத்தன்மையவென்று கூறிற்று. ஆதலால் யாம் விரும்பி அச்சொற்களுள் அறிந்தவற்றைக் கூட்டி உரைத்தே மாய்ப் பெரும் புகழுடைய இருவரையுந் தொழுது வேண்டுதும்.

—இளம் பெரு வழுதியார்

# 16.

## வையை

[இது, காதற் பரத்தையுடன் புனலாடிய தலைமகன் ; தோழியை வாயில் வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயின் மறுத்தது ]

கொடையுடைய பாண்டியனது ஈகைபோலுமென்று கண்டார் கூறக் கரிய மலையிடத்துள்ள

மிளகு கொடிகளோடும் சந்தனத்தோடும், வெண்ணெய் கடையும் தயிர்போன்ற நுரையோடும் பிற வற்றோடும் கரையின் எவ்விடத்தும் நீர் மேலும் மேலும் பெருகா நின்றது. துறையிடத்து, ஒத்த முத்துகளைக் கோத்த வடம், தலையில் அணியும் முத்து, பொன்னால் ஆய ஆபரணம். வலமாகச் சுழிக்கின்ற ஆற்றுநீர்கொண்டு வந்த மணிகள், நீராடுகின்ற புதல்வர் சிறிய தலையிற் சூடிய முஞ்ச மென்னும் மணி ஆகிய இவற்றை அணிந்து தத் தம் கணவரோடு நீராடும் தத்துகின்ற வரியுடைய கண்ணார் நிற்கும் இடந்தோறும் நீர்வாரா நிற்கும்

வயல்களிடத்தில் ஐதாகிய மலர்களைச் சுமந்து, பூவையுடைய நீர்நிறைதல், பாடுகின்ற இயங்களின் கண்ணொலியையும் பாட்டினையும் பயின்ற மகளிர் ஆடுகின்ற அரங்கினது அலங்கரித்த அழகை ஒக்கும்.

தமக்கு (சோலைகளுக்கு) விருந்தயர்வதுபோல் ஒலித்தொழுகும் தீம்புனலுக்கு எதிர்த்து விருந் தயர்வனபோல், கா, மென்மேலும் நெருங்கும் சுரும்புகள் ஒலிக்கும் மகரந்தத்துடனே நரந்தம் போன்ற நறிய மலர்களை அளிக்கும் மணமுடைய காவினும், கயங்களிலும், ஆற்றிடைக்குறையினும் மதுவையுண்டு தேன்கள் பாடப் பூக்களினாலுண் டாகிய அழகுவையையவரவின்கண் திசைதோறும் பொலிந்தது.

நீர் விசிறும் கருவிகளால் ஆயத்தார் சுற்றி நின்றெறியத் தன் குரும்பை முலைக்கட்பட்ட அரக்கு நீரைத் துடையாளாய் துகிலின் முன்புறத்தால் ஒற்றி நின்றாள். அவள் பாற் கணவன் வந்தான். அதனைத் தோழியர் கண்டு 'அவள் பூத்தனள்; அவளைப் பொருந்தாதே, நீங்கு' என்று பொய்யாகக் கூறினர். அப்பூப்பின் தோற்றத்தை ஒரு தலையாக ஒத்த செஞ்சாந்தின் நாற்றத்தால், அப்பூப்பின்மையை அறிந்து வைத்தும் சனத்திடையமைதலால், அவன் ஆண்டு நின்றும் நகையோடும், கடலை நோக்கி மலையினின்றும் பாய்ந்து வரும் ஆற்றை ஒப்ப விரைந்து வீடுபோந்தான். போந்து மகிழுமாறு பழத்தினாற் சமைத்த களிப்பு மிக்க தேறலை நுகராது, அவளது குருதிபோலும் நீரைத் துடைத்து மருவினன். மருவி அவ்வில்லத்தார் கேட்கும்படி நங்கை பூத்தனள் என்று சொல்ல அதற்கு அவள் நாணினள். வையையின் வரவு இத்தன்மையுடைதாயிருந்தது.

[இதுவும், வருவனவும் காதற் பரத்தையைக் குறித்துக் கூறியன.]

மலையினின்றும் இழிந்து செல்லும் அருவி கரையிடத்தே உள்ள பூக்கள் செறிந்த மரங்களைச் சேரும்; சேர்ந்து அம்மரங்களின் பூவால் அழகு பெற்று, மடவார் கூந்தலிற் சூடிய தேன் பொருந்திய தண்ணிய பூக்களும், மைந்தர் மார்பிடத்தே சூடிய மலரின் இதழ்களும் பரக்கும்படி செல்லும்.

மீனாகிய முத்துப் பூத்து விளங்கும் வானத்தின்கண் பெரிய கங்கையாறு வருகின்ற தன்மையை ஒத்திருக்கும். இவ்வாறு ஒத்திருத்தல் தேன் வண்டு ஊதுகின்ற வையைக்கு இயல்பு. விளங்குகின்ற ஒளியை உண்ட (மங்கையரின்) கண்ணாகிய கெண்டை மீனுக்கு, மதுபானம், புனலாட்டு, புலவி என்னும் இம்மூன்றினாலும் ஒள்ளிய நிறம் சிவக்கும். பல வரிகளையுடைய வண்டின் கூட்டம் தமது அழகிய வாய்களால், கூந்தலின்றும் நீங்கும் இயல்பினையுடைய பூக்களின்றும் தேனொழுக மிக்க நீரின் கண் ஆடும் பரத்தையரை அடுத்தடுத்துப் புல்லும்; புல்லுதலால் நெகிழ்ந்து அழிந்ததும் அழியாததுமாகிய கத்தூரிக் குழம்பு மார்பினின்றும் ஒழுகும். அம்மார்பு, பனியால் வளர்ந்த மூங்கில் அப்பனி நீங்க மேலே எழுந்து சென்று தாக்குதலால் தேன் சோர்ந்து விழும் வரையை ஒத்த தோற்றமுடையதாயிருக்கும். கொடி அணிந்த தேருடைய பாண்டியனது வையை ஆற்றின் இயல்பு இவ்வகையினது. மேகம் வரையிடத்து ஆரவாரித்து நிற்கும் அவ்வளவிற்கு, இவ்வியல்பினதாகிய வையைத் தீப்புனற்றிரை ஆரவாரிக்கும்.

[இவ்வளவும் தோழி தன்னுள்ளே கூறுவாளாய்ப் புனலாடிய வரலாறுகூறி, மேல் வையையை நோக்கிக் கூறுவாளாய் வாயின் மறுக்கின்றாள்.]

வையாய்! கண்ணியரும் தாரருமாகிய மைந்தரும், நறுங்கோதையினராகிய மகளிரும், முன் பொருள்களைத் தானம் பண்ணி, அதன் பயனாகிய

போகத்தைநுகரவேண்டி நாடோறும் ஆடுதலான், அவர் கையுறையாகிய பொன்மீன் முதலியவும், அவரணிந்த சாந்தும், மாலையும் ஈரம் புலர்த்தும் பொலிந்த புகையும் நினக்குத் தரும் உண்டியும் இடையறாதிருக்கும் பொருட்டு மழை மாறு தொழிக. அம்மழையாகிய வெள்ளம் பெருகி நின் பெருக்கு வற்று தொழிக.

—நல்லழுசியார்

## 17

### செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

ஆராதிப்போர், தீபங்களும், இசையுடைய வாத்தியங்களும், சந்தனம்முதலிய வாசனைத்திரவியங்களும், அகிற்புகையும், கொடிகளும் ஆகிய இவற்றை, ஒருங்கே ஏந்தித்தேன் பொருந்திய மலர்களையும், தழைகளையும், பூத்தொழில்களுடைய துகில்களையும், மணிகளையும், இலைபோன்ற உயர்ந்த வேலையும் சுமந்துசெல்வர்; சென்று சந்தனத்தைத் தெளித்து, அறையிடத்தே படிமத்தான் கட்டினகிடாய் நிற்கும் முருகனது கடம்பைஏத்துவர். ஆலாபனஞ்செய்து பாடல்களைப் பாடுகின்றவர்களாய், விரிந்த மலர்களினின்றும் சொட்டும் தேன் மரங்களை நனைக்கும் குன்றின் தாழ்வாரத்தில் மாலைக் காலத்தே கூடுவார்கள். இவருள் தேவருலகத்து உறைதலை வேண்டுவார் யார்? (வேண்டார் என்றவாறு.)

ஒருபக்கத்தே பாணர் மீட்கும் யாழின் இனிய ஓசைஎழுந்தது. ஒருபால் பூக்களாகிய புதுவரு வாயினையுடைய வண்டு ஊதுகின்ற இனிய இசை எழுந்தது. ஒருபக்கத்தே துளைகளுடைய குழலின் ஓசைஎழ, ஒருபக்கத்தே வண்டுகள் பரந்து பண் போன்ற இசையினைஊதின. ஒருபக்கத்தே ஓசையுடைய முழவின் ஒலிஎழ, ஒருபக்கத்தே மலையினின்று இழியும் அருவிநீர் ததும்பிஒலித்தது. ஒருபக்கத்தே பாடவல்ல விறலியர்வளைந்துஆட, ஒருபக்கத்தே வாடைக் காற்றுக்கு அசைந்து பூங்கொடிஆடிற்று. ஒருபக்கத்தே பாடினியின் பாலைப் பண்ணுகிய மிடற்றுப்பாடல்எழ, ஒருபக்கத்தே தாளத்துக்குஆடுகின்ற மயிலின் குரலெழுந்தது. இவ்வாறு கல்விகளால் மாறுபடும்தன்மை உற்றன போல ஒன்றுக்குமாறுக ஒன்று மாறுகொள்ளுந் தன்மை பகையைவென்ற முருகன் குன்றிடத்துண்டு.

பாடல்களாற் சிறந்து பலபுகழும் முற்றுப் பெற்ற கூடற்கும் பரங்குன்றுக்கும் இடையே உள்ள நிலம் மிக அணித்தாயினும், மைந்தரும் மகளிரும் நெருங்கிவிளையாடுதலால் மிகத்தூரத்தே நின்றது. அழகுமிக்க அவர் கூந்தலில் நின்றும், *குஞ்சியினின்றும் வீழ்ந்து அவிழ்ந்தமாலையால் செல்லும் வழிதடுக்கப்பட்டு வழிஇல்லை ஆயிற்று.

குற்றந்தீர்ந்த வேதத்தாலும், அது கூறும் வேள்வியாலும் புகழ் திசை எங்கும் பரந்த குன்

* உச்சிக்குமயிர்.

றிடத்தே, உலகத்தார் பலவிடத்தும் இருந்துசெய்
கின்ற பூசைக்கண் முருகன் அகிற்புகையை
அவியாகக் கொள்வான். அப்புகை இடந்தோறும்
மேலேபோதலான் சூரியமண்டலம் மறையும்;
தேவுக்கள் இமையாது நின்று நீங்குவர்.

குளிர்ந்தமாலையை அழகுபெற அணிந்
தோரும், வளை அணிந்த முன்கையினரும், வளை
ந்த இறை உடையருமாகிய இளம் மகளிர், அன்பு
ஒத்தாரும் தாரணிந்த மார்பினையுடையருமாகிய
மைந்தரின் அணையாகிய மென்தோளிற்தங்கி மன
மகிழ்ந்து சுனையிடத்தே பாய்ந்தாடுவர். அதற்கு
வெருண்ட வண்டுகள் வெருவிச்சுனையிடத்துள்ள
மலர்களின்மகரந்தத்தை ஊதாது நீங்கும். பரங்
குன்றினது அலங்காரம் இத்தன்மையது.

மலையினின்றும் இழிகின்ற நீண்ட வெள்ளிய
அருவி மிகவும்பரந்து உழவரது வயலிடத்தே
செல்லும். மேலே விளையாடு மகளிர் இயங்குதலால்
அவர் பூணினின்றும் விழுந்த நீலமணி உழுகின்ற
நிலத்தைச் சிதைக்கும்.

தம்மைப்பிரிந்து சென்றதலைவர் வினைமுடித்
துக்கொண்டு விரைவில்வந்து கூடுதற்குத், தலை
வியர், வெள்ளிய அருவி அழகுசெய்யும் பரங்குன்
றின்கண் தெய்வவிழா எடுப்பர். பிரிந்தவர் கூடிய
வழிக் கெடாத பெரிய புகழையுடைய செழுமை
பொருந்திய வையையிடத்துப்புனலாடுவர். ஏனை
யோர், பிடரிமயிர் கொய்த குதிரை பூண்ட, கொடி

யணிந்த தேருடைய பாண்டியனது கூடற்கண் புதுப்புனலாடுவார். கற்புடைமகளிரும் தலைவரது அறம் நிமித்தமாகப் பூசைசெய்து அப்பயன் நுகர்தலின் அது அவர்க்கு நல்லொழுக்கமாயிற்று.

நீலமணியின் நிறமுடைய மயிலினையும், உயர்ந்த கோழிக்கொடியினையும், பிணிமுகமென்னும் யானையையும் ஊர்ந்து செய்யும் வெல்லும் போரையுமுடைய தலைவரின் அன்பர்களாக அருளைப்பெறுவோமாக வென்று மக்கள் மாட்சிப்பணிந்த மொழியை ஒழித்து, நின்புகழை எத்தி யாமும் எம் சுற்றமும் வேண்டிக்கொள்ளா நின்றோம்.

— நல்லழுசியார்

## 18

செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

இரண்டுவந்து பொருத அவுணராது வலியாகிய செருக்குஒழிய, விசும்பிடத்தே பரந்து நிறைந்த சூலுடைய கார்கால மேகம்போல நீர் பரந்ததும் நிலந்தாங்குவதுமாகிய கடலுள், மாவடிவாய்ப் பரந்துநின்ற சூரபன்மாவின் வலிமையைக் கெடுத்தோய்! நின்னை என்ற புகழைத் தன்னிடத்தே கொண்ட இமயத்தோடு ஒப்போர் நின்று மாறுபட்டு ஏற்கும்புகழுடையது இப்பரங்குன்று.

[இனி முருகவேளைப் படர்க்கையாக்கி இம் மலைச் சிறப்புக் கூறுகின்றார்]

ஆடுகின்ற ஒள்ளிய மணிபோலும் அழகிய பொறியினையுடைய மயிலை நோக்கிய முருகக்கடவுள் அதன்அழகையும் களிப்பினையும் உள்ளத்திற் குறிக்கொண்டார். அதனை வள்ளிநாச்சியார் ; கண்டு, நீ நினைத்ததறிந்தேன் ; இனி அதனை எமக்கு உரை ; எம்மைநோக்காது இகழ்தலை மறைத்தல் ஒழி, என்று சொல்லி ஊடினாள். அவர் அவ்வூடலை மாற்றி, எனது காதலுக்குரியாய்! அம்மயிலாற் களவுகொள்ள அரிய நின் சாயல், மிகுந்த மகிழ்ச்சியாற் களவுகொள்ள எண்ணிய அம்மயில், அதனைப்பெறமாட்டாது வருந்துற்றது. அதனைக் கண்டு யான் நின்சாயலின் அருமையை நினைத்தேன். நீ, உன்னை இகழ்ந்தேமாகி நின்றேன் என்றாய்,” என இவ்வாறுகூறி அவ்வூடலை உடனே தீர்த்தார். முருகனது குன்றின் இயல்பு இவ்வகையினது.

[இது, பாணனுக்குத் தலைவன் பரத்தைமையைக் கூறுகின்ற ஒரு தலைவியின் கூற்று]

மெய்யில்அழகு பொலிதற்கு ஏதுவாகிய விரும்பத்தக்க பொன்னுபரணங்களையுடைய பாணா! * ஐந்து வளம்பொலிந்த பரங்குன்றின் மேல்வாழும் பூவின்அழகுடைய குளிர்ந்த கண்ணுடையாரது இறுகுதல் மிகுதியுடைய முயக்கத்தே அம்மகளிர் நகஞ்செய்த வடுக்களால் நந்தலைவரின் பரத்தைமையை நீ காணாய். நின்யாழ் நரம்பிற்கு

* அரக்கு கப்பூரம் செந்தேன், மயிலிறகு நாவி

ஏற்ப நட்ட பாடை என்னும் பண்ணைப்பாடும் நின் பழைய பாட்டுப்பொய்த்தது.

வேலை ஏந்தியவேளே! விரைந்த செலவினை யுடைய மயிலின்மீது வரும்ஞாயிறே! மழைமுழங்கு கின்ற நின் குன்றின் சிகரமும், அதன்கண் இருளைக் கிழிக்கும் கொடிபோன்ற மின்னும், நெற்றிப்பட்ட மணிந்த நின் களிற்றை ஒக்கும். நின் குன்றின் கண் சித்திரங்கள் தீட்டிய அழகிய அம்பலம், காமவேள் அம்புப்பயிற்சிசெய்யும், ‡சிரமச்சாலையை ஒக்கும். தெய்வம் உறைகின்ற வரையிடத்துள்ள சோலை களிற்றங்குகின்ற முகிலால் நீர் நிறைந்த சுனைகளில் அழகுமிகுந்து விளங்குகின்ற மலர்களின் செறிவு காமனின் கூரிய அம்பு நிறைந்த அம்பறாத் தூணி யை ஒக்கும்.

கார்காலத்து மலர்கின்ற காந்தட் பூங்கொத்து களின் நெருங்கிய அழகு, போரிற்தோற்றுக் கட் டுண்டவரின் கையையொக்கும். முன் பனிக்காலத்து அழகியமேகம் வானவில்லை வளைத்தது. சூதாடு கருவியை ஒத்த நினது மலைமேன் மரங்கள் அவ் வில்லுச் சொரிகின்ற கணைகளை ஒப்ப மெல்லிய மலரைப் பரப்பின. *சூதாடுங்காய்களை உருட்டு தல் வல்ல நின்மலைக்கண் உள்ள கோயிலிற் போரி டத்து மிகும் அரவம்போலத் திரளாகியதாள மொ

‡ ஆயுதப்பயிற்சி செய்யுமிடம்

* மலைசூதாடு கருவியையும், மரங்கள்சொரியும் காய்கள் சூதாடுங்காய்களையும் ஒக்கும் என்றவாறு.

லிக்கும் ஒலியோடு சிறந்து மேகக்கூட்டங்கள் ஒலித்தன.

அருவியோடுதலால் மலையின் சிகரங்கள் முத்தணிந்தாலொத்தன. குருவிகள் ஆரவாரிக்குமாறு தினைக்கதிர்கள் விளைந்தன. கரையினின்றும் சாய்ந்தயானையைமுட்டுகின்றவண்டூதும் சுனையிடத்துள்ள பல நிறமலர்கள் வளைந்து, வளைந்தவானவில்லை ஒப்ப அழகோடுவிளங்கின.

[இவ்வளவும் மலைச் சிறப்புக்கூறிமேல் வாழ்த்தி முடிக்கின்றார்]

பொருகின்ற வேலையுடையசெல்வ! நின் பூசைக்கண் மீட்டும் நரம்பின தொலியும், புலவர் பாடிய அழகிய பாடல்களும் பொருந்தி, வேத ஒலியும், உபசாரமாகிய பூவும் தீபமுங்கூடி எரியின்கண் உருகும் அகிலும்சந்தனமும் தூபமாய்க் கமழ்கின்ற நின் அடியின்கண் உறைதலை, எமக்குஉரித்தாக உறையும் பதியைச்சேர்ந்தாற்போல எம் சுற்றத்தோடுகூடியாம் பிரியாதிருப்பேமாக.

—குன்றம் பூதனார்

## 19

## செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

வானின்கண் உறைதலாகிய விருப்பை நீ இப்பூமியிடத்துங்கொண்டாய்; கொண்டு அறிவின் எல்லையால் அறியப்படாதபுகழினையுடைய கடம்பை மேவினாய்; மேவிப்பெறுதற்கரிய தலைமையை

யுடைய தேவரெய்தும் நுகர்ச்சியை இவ்வுலகத்து மக்களும் எய்துகளென்று நின்னுடையபரங்குன்றத்து, மயில்போன்றசாயலுடைய வள்ளியை அலங்காரத்தோடு கூடிய வதுவைகொண்டாய். அது தேவருலகத்துத் தெய்வயானையது மணவிழாவோடு மாறுகொள்ளுந்தன்மையுடையது.

புணர்ச்சியோடுவந்த இரவு நீங்கி வைகறை வந்தது. இவ்வுலகத்து அறத்தைப் பெரிதாகச் செய்து அதன்பயனை நுகரவேண்டித் தேவருலகத்துச் செல்வாரைப்போல, அறிவினானும் வீரத்தினானும் பிறரைப்போர் வெல்லும் கூடலிடத்து மகளிரும் மைந்தரும் தமக்கேற்ற மாட்சியுடைய அணியும்ஆபரணங்களையும், நல்லபட்டாடைகளையும் அணிந்தனர்; விருப்பமிகுந்தகுதிரை மீதினராயும், ஓடுகின்ற தேரராயும், தெரிந்தமலரால்தொடுத்த தாரராயும் தெருவின் இருள் அகலும்படி சென்றனர். நின்குன்றிற்கும் கூடற்கும் இடையேஉள்ள இடம் எல்லாம் நெருங்கி அவர்யாத்திரைசெய்கின்ற வழி குளிர்ந்தமணல் பரந்த சோலைபோன்றது. அவர்களின் மாலையணிந்த தலைகள் இடைவெளியற நிறைதலால் அவை ஒத்தபூக்களை நிறையவைத்துக் கட்டிப் பெரியநிலத்துக்கு அணிந்த மாலை போன்றன.

ஒலிக்கின்ற மணிகட்டிய யானையுடையபெரியோய்! அறிவுதிருந்திய வழுதி மடமயிலனைய மகளிரோடும் காரியக்கடனறிந்த தன் கண்ணாகிய

அமைச்சரோடும்கூடி நாட்டிலுள்ளவரும் நகரி லுள்ளவரும் ஆலவட்டங்களைத் தோளிற்தாங்கியும், நாவினால் ஏத்தியும், சூழவந்து நின் விசாலித்த மலைமீது ஏறி நீ வீற்றிருக்கும் அழகியஆலயம் பெருமைஉண்டாக வலம்வருவர். அத்தோற்றம் உடுக்கணங்கள் புடைசூழச் சந்திரன் மேருவின் பக்கத்தே வந்தது போன்றது.

வண்டுகள்தொடர்கின்ற மதம் சொரியும் கன்னமுடைய யானைகளைப் பாகர் அவற்றின் கழுத்திற்கட்டியுள்ள அழகிய கயிறுகளால்மரங் களிற்கட்டித் துண்டுதுண்டாகத் துணித்த கரும்பை ஊட்டுவர். மாலையணிந்த குதிரைகளை வழியிலே இளைப்பாறும் பொருட்டு நிறுத்துவோர் திண்ணிய தேர்களை வழியிடத்தே நிறுத்துவர். அவைபரத் தலால் நின்குன்றத்தின் கீழ் நின்ற* இடை நிலம் பாண்டியனது பாசறையின் தன்மையை உடைய தாயிருக்கும்.

[இனி, வழுதியுடன் குன்றின்மீது ஏறியோரது விநோதங் கூறுவாராய் மலைச் சிறப்புக் கூறுகின் றார்]

குன்றிடத்துள்ள குரங்குகள் அருந்தும்படி, சிலர்தீன்பண்டங்களைக் கொடுப்பர். சிலர், கருங் குரங்குகளுக்குக் கரும்பைக் கொடுப்பர். சிலர், தெய்வத்தன்மையுடைய பிரமவீணையை மீட்பர்.

---

* கடலினின்றும் போந்து குன்றில் ஏறமாட்டாது நின்ற இடை நிலம்.

சிலர் குழலிடத்துக் கையைவைத்து ஊதுவர். சிலர். இளி, குரல் என்னும் இசைகளைச் சமமாகயாழிற் பாடி இன்பங்கொள்வர். சிலர், பூசையின் அழகை எடுத்தியம்புவர் ; சிலர், யாழ்நரம்பின் இசை கொம்மென ஒலித்தஅளவில் அத்தாளத்துக்கு ஏற்பமுரசொலியை எழுப்புவர். சிலர், நாள் மீன்களையும் தாரகைகளையும் உடைய துருவசக் கரத்தைப் பொருந்திய ஆதித்தன்முதலாக வரும் கோட்களது நிலையைத்தீட்டியசித்திரங்களை நோக்கியறிந்தனர்; விரகியர் வினவ, இவன் காமன் இவள் இரதிஎன்று சிலர்விடை இறுத்தனர்.

இப்பூனை இந்திரன், அவ்விடத்திற்சென்ற கௌதமமுனிவன் இவன் ; சினமிகுதலால் இவள் கல்லுரு எய்தியவாறிது, என்றுகணவனைப் பிழைத்தாரின் தண்டங்களைக்கூறினர் சிலர்.

துதிக்கப்படும் பரங்குன்றத்துத் *திருமால் மருகனது சித்திர மண்டபத்தின்பக்கம், சென்றவர்கையாற் சுட்டிக்காட்டிக்கேட்கவும், கேட்டவற்றை அயலேநின்றவர் அறிவிக்கவும் பற்பல சித்திரங்களையுடையதாயிருக்கும். அம்மண்டபம்

---

* திருமாலின் குமாரிகளாகிய அமுதவல்லி சுந்தரிஎன்னும் இருவரும் முருகக்கடவுளின் ஆணையின்படி முறையே இந்திரன் மகள் தேவசேனையாகவும், சிவமுனிவரிடத்து மான்வயிற்றில்வள்ளியாகவும்பிறந்தனர். இவர்களை முருகக்கடவுள் மணந்தமையான் மால்மருகன் எனப்படுவேர். "அறுதினம் விழிதுயில்பவர் தங்கச்சிக் கொருபுதல்வோனே," எனத்திருமாலின் தங்கச்சியாகிய உமாதேவியாரின் புதல்வனென்று அருணகிரி நாதர் கூறுவர்.

மூங்கில்களையும் விரிந்த பாறைகளையுமுடைய அகன்ற இடத்தே செய்யப்பட்டிருந்தமையால் விளக்கமான நிலைமையை உடைத்து.

பேதைப்பருவத்தாள் ஒருபெண் பிறந்த தமரினின்றும் நீங்கி அவ்விடத்துள்ளவற்றைக் காண்டல் விருப்பால் உயர்ந்தகற்களின் இடையேபுகுந்து 'வந்தவழியைமறந்தேன்' என்று திகைத்து நின்றாள். நின்று 'பிறந்தவரே! பிறந்தவரோ! என்று தமரைக் கூவிஅழைத்தாள். அவள் அழைக்கின்ற குரலை மலைக் குகைகள் தாமும் எதிரொலி செய்து அழைத்தன. அதைஅறியாத அவள், தமர்தம்மை அழைக்கின்றாராகக் கருதி அவ்வழைத்த விடத்துச் சென்றாள். அவ்விடத்துத் தமரைக்காணாது மீளுமிடத்து அவள் தமரைக்கூவிக்கூவி அழைத்தாள். அன்பரதுதுதியை உவக்கும் முருகனது குன்றின் இட வேறுபாடு பிறர்க்கு இவ்வாறு மயக்கந்தருதலையுடையது.

மிகவும் அழகிய நுனிசாய்ந்த கொம்பைப் பிளந்து புறப்பட்டதளிர்களை இளம் மகளிர் விளையாட்டாக இனிய சுனையிடத்து உதிர்ப்பர். அத்தளிர்கள் சுனையிடத்தேதலையை உயர்த்தினவாய் அலரோடும் முகையோடும் பொருந்திக்கிடக்கும். அவற்றுள் அலரோடுகிடந்தவற்றை, இது விரிந்த ஐந்துதலையினையும் விளங்குகின்ற பொறியினையுமுடைய அரவென்றும், அதன் அருகே முதிர்ந்த முகையோடு கிடந்த ஒருதளிரை அதன்மைந்த

னென்றும் இளமுகையோடு கிடந்த மற்றொன்றை அதன்குட்டி என்றும் அம்மகளிர் மருண்டனர். பச்சிலை இளங்கொழுந்துகளை நீட்டின. ஆம்பல் மகளிர் வாய்போல்விரிந்தன. காந்தள் நாறு கின்றகுலைகளைக் கைபோற்பூத்தன. எருவை நறியபூங்கொத்துகளை ஈன்றன. வேங்கைநெருப்புப் போன்ற பூங்கொத்துகளைப்பரப்பின. இன்னும் நிறம் மிகுந்ததோன்றி, அலர்ந்தகொத்துகளை யுடைய நறவம், காலங்குறியாது பூக்கும் கோங்கு, கோங்கின்போதோடு நிறத்தாற்பகைத்த மலரு டைய இலவம் ஆகியஇவையெல்லாம் தெற்றின மாலைகள்போல மலரால் நிறைந்தன. அம்மலர்கள் கோத்தமாலைகள்போல நிறம் மாறுபட்டும் தொடுத்த மாலைகள்போல இடைஇட்டும், தூக்கிக்கட்டிய மாலைகள்போல நெருங்கியும் பூத்தலால் ஒன்றோடொன்று மயங்கின. அதனால் நின்குன்றின் உச்சி, விடியற்காலத்துப் பலநிற மேகம் பரந்தவானம்போன்ற காட்சி அளிக்கும்.

குறப்பெண்ணாகிய வள்ளியை மணந்தோய்! எமதுவாழ்த்தினை நின் செவிக்குச்சிறந்த உண வாகக் கொள்ளவேண்டும். கடப்பமாலையையும் சிவந்த உடையையும் உடையை! நின்வேலும் அவ்வாறே பவழக்கொடியின் நிறங்கொள்ளும். நீ நிறத்தால் எரிகின்ற தீயைஒப்பை; முகங்களால் நீ ஆதித்த மண்டலத்தை ஒப்பை.

உலகிற்கு வருத்தஞ்செய்தலான் நீதியிற் தப்பிய சூரபன்மாவாகிய மாவைத்தடிந்து, வலிய

கிரௌஞ்சமலையிற் றிருந்திய வேலைவிட்டு அதனை உடைத்தோய்! எமது சுற்றமும்நாமும் உன்னை ஏந்திப், பரங்குன்றிடத்துக் கடம்பின்கண் அமர்ந்த நல்ல நின் நிலையை வாழ்த்தினேம்; எமது வாழ்த்து இது.

—நப்பண்ணனார்

## 20

வையை

[இது, பருவ வரவின்கண் தலைமகளது ஆற்றாமைகண்டு, தூதாகச்சென்ற பாணன் தலைமகற்குக்கார்ப்பருவமும் வையை நீர்விழாச் சிறப்பும் கூறியது]

மலைஇடத்துள்ள கல்நொறுங்கும்படி இடி இடித்தது. கடல்வற்றும்படி நீரைக்குடித்துச் சூல்முதிர்ந்தமுகில் மலையைச்சூழ்ந்து மழை பொழிந்தது. அம்மழைநீர், எதிர்த்துப் பொரு புலியைப் போழ்ந்த புகர்நெற்றியுடைய யானையின் இரத்தமளைந்த கோட்டின் கண்உள்ள கறை போகும்படிகழுவும். முகிற்கூட்டங்கள் காலைப் பொழுதிற் கடலைமுகந்து மாலைப்பொழுதிற் சூரியன் படுகின்ற திசையிடத்துள்ள மலையைச்சேர்ந்து இராக்காலத்தே மழையைப்பெய்யும். மரங்கள் தருகின்றமலர்களின் நாற்றமும், தேன்தருகின்ற மலர் நாற்றமும் காய்கின்றவெய்யிலையும் மிக்க காற்றையுமுடைய காடுகள்தரும் நாற்றமும், மரக் கோடுகளுதிர்த்த கனிகளது நாற்றமுமாகிய

இவற்றை உடன்கலந்து கொண்டு வந்து வையை பிறர்க்குக் கொடுக்கும்.

கரையிடத்துள்ள விசாலித்த சோலையின் நாற்றத்தின்மேலே ஆற்றினது வெம்மையாற் றோன்றும் நாற்றத்தை நுகர்ந்து ஊரார் ஆசையோடு நீராடும்படி பறைஒலித்தது. மதிலின் மதகுகளில் நீர் ஓடுகின்ற ஓசையினால் கூடலிலுள்ளார் துயிலெழுந்தனர். எழுந்து நித்திரைமயக்கத்தால் தேர்களில் வண்டிகளிற்பூட்டும் எருதுகளையும், வண்டிகளிற் தேரிற்பூட்டும் குதிரைகளையும்பூட்டி ஊர்ந்தனர்; குதிரைகளுக்கிடும் மெத்தையை யானைக்கிட்டனர்; மறதியால் யானைகளை அலங்கரியாது நடத்திச்சென்றனர். மகளிர்மாலையை மைந்தர்புனைந்தனர். மைந்தர்அணியும் குளிர்ச்சி பொருந்திய தாரைமகளிர் அணிந்தனர். தாந்தாம் முந்திச் செல்லுதல்வேண்டுமென்றும் விருப்பினால் அணியும் முறைமையை மறந்து மாறி அணிந்தவரெல்லாம், விளையாட்டு மகளிர் இழைத்த சிற்றில்லை அழகுசெய்யும் வண்டு பாடுகின்ற மணலுடைய கரையின் உயர்ந்தமேட்டை வந்துபொரும்புனலைச் சென்று குறுகினர். அணியாதவர்கள் இல்லினின்றும் புறப்பட்டு மாடங்களுடைய வீதிகளிற் செல்லுதற்கு வருத்த முற்றனர். இவ்வாறெல்லாம் கூடலிலுள்ளார் விரும்புந்தன்மையுடையது வையைப் புனல்.

பூங்கொத்துகளைச் சந்தனப் புகையூட்டி அணிந்தோரும், தாரை நெருக்கி அணிந்தோரும்,

கண்ணியும் வலயமும் அணிந்தோருமாகிய திரள் வந்தேறிவையைக் கரைப் பரப்பின் கண்ணே நின்றனர். அயலே நிற்பவர், அயலார் அணிந்த அணிகளைப் பார்த்தனர். அவ்விடத்து நின்றோரில், தன் தலைவி அணியும் வளையையும் முத்து மாலையையும் பரத்தைக்குக் கொடுத்த தலைவன் ஒருவனுகும். அவன் தலைவியோடு உடன் நின்றான். காணுது போன வளைகள்பரத்தையின் கையில் இருப்பதைக் கண்ட ஆயத்தார் வருந்தி அவட்கு இவள் மாற்றாள் என்று தம்முள் எண்ணிப் பார்த்தனர். அவற்றை அவட்குக் கொடுத்த அக்கள்வன் அப்பார்வையைக் கண்டு நாணினன். அதனைக்கண்டோர் அவன் முகத்தைப் பார்மின் என்று ஒருவரோடு ஒருவர் கூறினர்.

கோபித்துப் போர் செய்யும் அம்புகளை ஒத்தனவும், அழகிய மலரின் அழகைக் உண்டனவுமாகிய கண்ணையுடைய பரத்தை, அவ்வாயம் தான் அணிந்திருக்கும் வளைகளைக் காணுமல் கூட்டத்துள் ஓடி ஒளித்து மறையலானுள். இச்செயலை ஒருவர் ஒருவருக்குக் காட்டி நின்றனர்.

வையை நீர் கடலுட் புகுந்து மறைந்தாற்போன்று தப்பப் போகின்றவளைத் தலைவியும் ஆயத்தாரும் கண்டு, மாற்றாள் என்று தெளிந்து மணலுடைய கரையிடத்தே தேடிச்சென்று அவளை நிற்கும்படி கூவினர். பெண்கள் நிரைத்து நிற்கும் கூட்டத்தின் கண் நீயிர் என்னைத் தொடர்தற்குக்

காரணம் யாதெனச் சொல்லி அப்பரத்தை எதிர்த்தாள். எதிர்த்தலும் அத்தலைவி சித்தந் திகைத்து ஒன்றும் சொல்லாது நின்றாள்.

[அவள் அங்ஙனம் நிற்ப ஆயத் தொருத்தி பரத்தையை நோக்கிச் சொல்லுகின்றாள்.]

விரும்பப்படும் காமத்தை வஞ்சனையுடைய பொய்யோடுங்கூட்டிக் கொள்வாரை மயக்கும் விலைத்தொழிலையுடைய கணிகாய்! நின்பெண்மையது பொதுமையால் ஒருவராற் பேணப்படுதலில்லாதாய்! ஐம்புலன்களால் நுகரப்படுவனவற்றை நுகர்கின்ற காமுகப்பன்றிகள் நுகரும் இரண்டு இதழ் பொருந்திய தொட்டி!

பெண் தன்மையுடைய வனப்பாகியவயலிலே இனிய கள்ளாகிய புனலை விட்டுக் காமமாகிய களிப்புள்ள கலப்பையால் எமது எருது வலிகெடாமல் உழும் பழைய உழவுசாலே! பொருளிட்டாரைப் போகாமற்றடுத்து, அழகியமதர்த்த கண்ணைக்கயிறுகக் கொண்டு தோளாகிய தறியோடு பிணித்துக்காமம் மிகுதற் பொருட்டுயாழிசையை ஆர்த்து, அளவில்லாத இவற்றையன்றி எமது ஆபரணங்களை அணிந்து வளையைப்பூண்டு இன்பத்துறைபோலப் பொது வாயுள்ளாய். முன்னே காணுமற்போன எம் எருதையாம் தேடித்திரிந்து இவ்விளையாட்டு மகளிர்காண இவ்விடத்து வணங்கச்செய்தேம்! செய்து இவ்வையையாகிய தொழுவத்துப் புகவிட்டு, வசமாக்கி உரப்பி மாலையை அடிக்குங்கோலாகக்

கொண்டு அடித்தேம்; அடித்து இவ்வழக்கு உரைக்கும் அவையத்தில் எம்எருதாதல் யாவரும் அறியத் தொடர்ந்தேம். தம் எருதை உழுதற் ருெழில்செய்யாமல்ஓடவிடும் முறைமை வேளாளர்க் கின்று.

தனக்குரிய தலைவன் மார்பை நினக்குத் தண்டமாகத்தரும் ஆரத்தையுடையாள் மார்பும், அவ்வாரத்தைக் களவுகொண்டு பூண்ட நின்மார்பும் ஒத்த தன்மையவாய் விட்டனவேஎன்று ஆயத்தினர் வைதுசொல்லினர். அவர்களாற் தேடப்பட்ட அப்பரத்தை தலைவியைச் சிலசுடு சொற்களாலே சினள். அதனைக்கேட்ட வையை யகத்தேநின்ற முதுமகளிர் வெறுத்தனர்; வெறுத்து, 'கற்புடைமையாற் சிந்தித்த அளவிலே பாவம் நீங்கும் தன்மையாளை வையாதொழிக. நீ வெஞ்சொற் சொல்லி அறியாமையுற்ருய். அது நீங்க இவ்வழகிய மயிலின்சாயலை உடையவளை வந்து வழிபடுக' என்று கூறினர். அதனைக்கேட்ட அப்பரத்தை இது மனத்துட் பெரிய துன்பமாயிருக்கின்றது என்று தனக்குள்ளே சொன்ஞள். பின் அம்முதுமகளிரில் ஒருத்தியைமணலிடத்து நோக்கி அன்ஞய்! பகைவரைப் பகைவர் தொழுதல் இளிவரவு; அதனைநீஅறிந்திலை; பெரியோய்! அவ்வாறேமாற் ருளை மாற்ருள் வணங்குதலும் பெருமையின்று.

தலைவி :—நல்ல மெல்லிய இனிய சொற்களை நாணமற் பல அவைக் கண்ணுஞ் சொல்லி ஆடு

தற்கு முழவுடனே வருவாய். நின் பெருமை கூற வேண்டியதில்லை. எந்தை எனக்கிட்டவளையும் முத்துமாலையுமாகிய பூண் நின்பால் வந்த வழி, மாயத்தையுடைய களவன்றாயின், நினக்கு அவை தந்தவனைக் காட்டித் தந்து பின்னை மேன்மை யுள்ளவளாகு.

பரத்தை :—மோசி மல்லிகையைச் சூடினேய்! நீ சால அன்பு பூண்டவன் என் மாட்டு அன்பு டையவனுதலால் இவ்வளையையும், ஆரத்தையும், புணர்தற்கு விலையாகத் தந்தான். அவன் இவற்றை யன்றி நாளை நின் காலிடத்துள்ள சிலம் புகளையும் கழற்றுந் தன்மையான்; ஆதலின் யான் கள்வியல்லேன். அவன் கள்வன்; அவனைப் பற் றுவாயாக.

இவ்வாறு அவள் கூறுதலும் அவ்விடத்து நின்றோர் அவளை நோக்கி வசீகரித்தலையுடை மானே! மாறுபடுதலை ஒழி; நும்மை விரும்பின காமுகர் நுமக்குத் தரும் பொருள் நாடிய நும் மனவே எனக் கூறித்தணிவுபடுத்தினர். பின் அவர் தலைவியை நோக்கிப், புணர்ச்சி இனியபரத் தையர்பாற் சென்று அமர்வானை மனையாளாற் செல்லாமற்காத்தலும் சென்றானென்று நீக்கிஒழு கலும்கூடுமோ? அவைகூடா. சால்புடைமை மிக்கா ராகிய கற்புடை மங்கையர் தம்மைக் கணவர் இகழினும் அவரை எய்தா நிற்பர். பரத்தைய ரிடத்து மயங்கி விரும்பி அவரைச் சேர்ந்த மைந்

தார் மார்பை இனிக்தோயோ மென்றிருத்தல் மங்கையர்க்கு முடிவு போவதன்று. முனியாதே; கொடியை ஒத்தவளே! காமம் தகுந்தவழியில் நிற்குமோ? என இவ்வாறு கூறினார். பாண்டியனது வையையின் சிறப்பு இத்தன்மையவாகிய துனியையும் புலவியையும் ஏற்கப்பண்ணும்.

குவிந்த காந்தள் முகையும், அரவு வெகுண்டு படம் விரித்தாற் போல விரிந்த காந்தட்குலைகளும், அக்காந்தளாற் கோலப்பட்டுக் சுனையினின்றும் கழிந்து வீழும் சுனை மலர்களும், புதரிடத்துச் சொரிந்த பூக்களுமாகி அருவி சொரிந்தவற்றைத் திரையாற் தள்ளிக்கொண்டு நெடிய பெரிய மதகின் நடுவாகிய வழியைப் போந்து புனல் சொரியும் அத்தோற்றம் களிறு நீரை உறிஞ்சிக் கைவழியாகச் சொரிவதை ஒக்கும்.

இவ்வாற்றால் புணர்தலும் பிரிதலுமாக இக்காமத்தையும் இதற்குச் செருக்கினை விளைக்கும் கள்ளையும் உடன் விரவி மகளிர் யாவரும் பாராட்டத் தாம் விரும்பின காதலரோடு புனலாடுமாறு முன் பிரிந்தவரைக் கொண்டு கூட்டுதல் வையைக்குண்டு.

—ஆசிரியர் நல்லந்துவனர்.

## 21

### செவ்வேள்

### கடவுள் வாழ்த்து

நீ ஊர்வது, விளக்கத்தால் எரியை ஒத்த நெற்றிப்பட்டத்தின் நடுவேகிடந்து விளங்கும் சென்னியையுடைத்தாயவேழம். காலிடத்தே தரித்திருப்பது, பவழம்போலும் துவர்நீர்த்துறையிலே மறையமூழ்கிய இலையினால், தாமரை மலர்போன்ற தாளிற்கு இயையத்தைத்த, பாம்பின் முதுகிற் றோலுடனே அதன் மயிர் நெருங்கிய தோலைக் கீறினவாரை ஒத்த, மயிலிறகால் அழகுசெய்த இலைச் செருப்பாகும். கையிடத்துள்ளது, நின்னை மதியாத அவுணர் தமக்குத் துணையாக மதித்த மாவைவெட்டிக் கிரௌஞ்ச மலையைப் பிளந்த வேல் பூண்டிருப்பது சுருண்ட வள்ளிப் பூவை இடையே வைத்துத் தொடுத்த வட்டமாகிய கடப்ப மலர்த்தார். அமர்ந்திருப்பது, குற்றந்தீர்ந்த அன்பர் போற்றித் துதிக்கின்ற *ஏழிலைப் பாலையும் அதனையுடைய சிறிய வரையாகிய தவிசும், அருவியாகிய முகபடாமும் உடையதாய்த் தரையின் கண் நின்று விசும்புற ஓங்கிய யானையாகியபரங்குன்றம்.

வெற்றியாற் கொடியை அலங்கரித்த செல்வ! நின்னைத் தொழுது இக்குன்றின் அடியில் உறைதல் எமக்கு மறு பிறப்பினும் இயைகவென வேண்டுவேம்.

---

* ஏழிலைப் பாலை மதநாற்றத்துக்கு உவமை.

நின் குன்றிடத்தே, ஒருத்தி, ஓடவைத்த பொன்னாற் செய்த சிலம்பின் மூத்தாகிய உள்ளிடு மணி எங்குங் கேட்க ஆர்ப்பத் தூடியின் தாளத் துக்கு இயைய அடி எடுத்து வைத்துத் தோளை சைத்துக் கள்ளுண்ட மகிழ்ச்சி தடுப்ப அழகு காரணமாகக், கூர்விலங்குகின்ற வேலெனச் சிவந்த நோக்கத்தோடு, துணையாக அணைகின்ற தலைவனைத் துணித்து நின்றாள்.

அழல்போன்று விளங்கும் ஆபரணமுடையாளொருத்தி, இவளினும் எனக்கு அழகுண்டாய வழி அவளை நோக்கானென்று கருதிக்கண்ணாடியை நோக்கி நின்றாள். இன்னொருத்தி பொங்கியமுலையிடத்தே சந்தனத்தைப் பூசி உதிர்த்து நாற்றம் நிலைபெற்றவழி அவன் தன்னைத் தழுவுவானென்று கருதி அதனைப்பின்னும் பின்னும் ஊட்டி நின்றாள். இத்தன்மையவாகிய பலவற்றைப் புரிகின்ற மகளிர் தொழில்களை நினைப்பின் கைவல்லான் எழுதிய ஓவியத்தழகு போலாகும்.

மாவை வெட்டியோய்! நின் குன்றின் மீது எடுக்கப்பட்ட சிற்றாலவட்டம்போல மேகம் முழங்குகின்ற இடத்தே இரண்டு இறகையும் விரித்து விளங்கும் பொறிகளையுடைய மயில்கள் எழுந்தாடும். விரலாற்செறித்து ஊதுகின்ற வங்கியத்தின் இசைக்கு ஏற்ப ஊதுகின்ற குரலுடைய தும்பி விரிந்த மலர்களை ஊதும். அழகிய வண்டின் கூட்டம் யாழின் இசையை மேலும் மேலும் எழுப்

பும் பாணி என்னும் தாளத்தையுடைய முழவின் இசைபோல அருவி நீர் ததும்பி ஒலிக்கும். இவ்வாறு தம்முள் மாறுபட்ட பலவும் முரசுடையவன் குன்றிடத்தொருங்கே ஒலிக்கும்.

ஆபரணங்களை அணிந்த ஒருத்தி, ஒலிக்கின்ற ஆழ்ந்த சுனை நடுவே மூழ்கி அவ்விடத்தே நீர்மேல் எழுந்தாள்; கரையினின்ற கணவனைத் தெப்பமாகிய மூங்கிற்கழியை நீரில் அழுந்துகின்ற தன்கையிடத்தே தரும்படி வேண்டினாள். அவன் அதனைக் கொடாது அரக்கு நீர் கரந்தவட்டை எறிதலாற் புணை பெறாது ஆழ்ந்த நீரில் அவள் படுகின்ற துயரைக்கண்டு இன்புற்றான். பின் அந்நீரின் கண் வீழ்ந்து அவளைத் தழுவினான். இவ்வியல்பினது தண்ணிய தண்பரங்குன்றம்.

வண்டார்க்கின்ற மலையிடத்தே மைந்தர் பூசிய சந்தனத்தைப் புலர்த்துங்காற்றும், கயலை ஒத்த கண்ணுடையார் கமழ்கின்ற தாதை உதிர்த்த மேகத்தை ஒத்த கூந்தலின் அகத்தே ஊடு புகுந்து அசைத்த காற்றும், வட்டமாகிய பூங்கொத்துடைய கடம்பின் கண் மேவிய நினக்குப் பூசைக்கட்பாத்திரத் தெடுத்த கமழ்கின்ற புகையூடு எழுந்த காற்றும், குகைகளிற் பரந்து இடையறா தொழுகும் அருவியும் நின்குன்ற முடைத்து.

சுடர் பரந்த கொடியின் மின்னுப் போலக் கண்ணிற்கு ஒளிர்ந்து திகழ்கின்ற பொற்றகட்டால் விளக்கமும் அழகும் செறிப்பும் இடை

யிடையே பெறப்புனைந்த அழகிய மாலை கூந்த லோடு அசைய மாணிக்கத்தை ஒக்கச் சிவந்த, தேனுற் சமைத்த கள்ளை நுகர்ந்த மகிழ்ச்சி தங்கப வும் பச்சை சிறப்பாட்டாடை நெகிழவும், கண் சிவப் பேறவும், கணவன் எழுப்புகின்ற துடியின் தாளத் தால் அறுதியை அளப்பது போல முலைக்கண் அணிந்த முத்தாரம் அசைய ஆடுவாள். காற்றி ஞல் ஆடை அசையவும், அணி அசையவும் அசை யும் கொம்பருண்டாயின் அவள் அழகை ஒக்கும். துடியின் தாளத்துக்கு இசையத் தோளைப்பெயர்ப் பவள் கண் அம்பு புடை பெயர்வது போலும்.

[இவ்வளவும் மலைச் சிறப்புக் கூறி மேல் வாழ்த்தி முடிக்கின்ருர்.]

பகைவரை அமரிடத்துத் தொலைத்த வேலையு டையை! உயர்ந்த பன்னிரண்டு தோள்களுடை யை! எம் விரும்பப் படும் சுற்றத்தோடு கூடி நின் அடிக்கண் உறைதல் இன்றுபோல என்றும் இயைக என்று நின்னைப் பரவுகின்றேம்.

—நல்லச்சுதனர்

## 22

வையை

விளங்குகின்ற வாளுடைய வேந்தன் போர்க் களத்தே வெட்டி வீழ்த்திய யானைப் பிணங்கள் போல முகிற் கூட்டங்கள் நெருங்கின. அரசனைக் கொன்று போரை வென்ற பெரிய வேந்தனது வெற்றி முரசு அதிர்வது போல முழக்கத்தோடு

இடி இடித்தது. பகைவரை வருத்துகின்ற அவன் படை வில்லை வளைத்து விசையோடு சொரியும் அம்பு போல துமிகள் நெருங்கிச் சிதறின. கண்ணைப் பகட்டுகின்ற வேகத்தை உடைய மின்னல் மின்னிற்று. அவன் கொடை போல வானம் மழையைப் பொழிந்தது. மழையால் எழுந்த வெள்ளம் நிலத்தில் வந்து கூடி அரசனின் படை போற் பரந்தது; ஊக்கத்தோடு எவ்விடங்களிலும் பரந்து வைக்கோற் போருடைய வயல்களிற் புகுந்தது.

வையை வரவின் கண் கூடலிலுள்ளார் புதுப் புனலாடுதற்கு எழுந்தனர். மணமுரசு ஒலித்தது. அழகிய பெண்கள் பாக்கு, புகை, சாந்து எறிவன, எக்குவன முதலிய நீர் விளையாட்டுக் குரியவற்றையும், அழகிய ஆபரணங்கள், பூத்தொழிலுடைய ஆடை முதலிய வற்றையும் ஏந்தி ஆயத்தார் பின் தொடரக் கூட்டங் கூட்டமாக முற்பட்டுச் சென்றனர்.

செறிந்த வினை பொலிந்த பூங்கண்ணி சூடியோரும், குளிர்ச்சியுடைய வெட்சியின் இதழ் புனைந்த கோதையரும், தாரணிந்த முடியினரும், அழகிய மார்பினரும், ஊர்ந்து வந்த குதிரையும், யானையும், மணி கட்டிய கோவேறு கழுதைகளும் காவின் கண் நிறைந்தன.

வேற் போரைச் செய்யும் வலியினையுடைய முருகனைப் போல ஆற்றலோடு கூடிய வலியினை

யும், புனைந்த கழலினையுமுடைய மைந்தர் நாற்ற முடைய மலர் அம்பினோனாகிய காமனைப்போலத் தாரையும் அழகையு முடையரா யிருந்தனர். அவர் களைக் கண்டோர் இவர் தவப்பயன் மிகப் பெரி தென்று கூறினர்.

இளம் மங்கையர், முகில் போன்று அழகிய கூந்தலும், கயல்போன்ற கண்ணும், முருக்கின் பூவை ஒத்த இதழும், கச்சணிந்த இளமுலையும், வகை வகையாகக்கோத்த எண் கோவை மணி முதலியவும், அழகிய இலங்குகின்ற பற்கள் தோன்றச் சிரிக்கின்ற இனிய நகையும் உடையரா யிருந்தனர்.

இவ்விருதிறத்தாரையும் கரையையும் வையை யையும் நோக்குகின்ற அழகு காண்டற்கு இனிது. ஓசையுடைய முழவின் இனிய கண்ணின் ஒலிக்கு எதிரே விண்ணின் கண் இடியேறு மாறி மாறி முழங்கிற்று. விரும்பப்படும் பாலையாழின் ஒலிக்கு மாறாகப் புகர் நிறமும், வரியுமுடைய வண்டினம் பூங்கொம்பர்களினிடையே பாடின. ஊதுகின்ற நல்ல இனிய குழலுக்கு மாறாக மலரிடத்திற் தாதூ தும் உயர்ந்தசாதி வண்டினங்கள் பாடின. தாள அறுதிக்கு ஆடுகின்ற விறலியரின் ஆடலை ஒப்ப பூங்கொத்துகளுடைய மெல்லிய கொடிகள் காற் றுக்கு அசைந்தன. இனிய புனல் உடைய அழ கிய மருத முன்றுறையிடத்து இவ்வாறு ஒன்றோடு ஒன்று மாறு கொள்ளும்.

பூங்கொத்துகள் பொலிந்த தழைத்து அசைகின்ற கரிய கூந்தலையுடைய மகளிர் தங்கள் கணவரின் தோளிற் சாய்ந்து தழையும் மலரும் துவளுகின்ற கொடிகள் போலாயினார்.

## திருமால்.

வானிடத்து ஆர்க்கின்ற முகில் மழை வளம் பெருகும்படி தென்கூடு பொருந்திய மலையிடத்தே படியும். அம் மழைநீர் நான்மாடக் கூடலிலுள்ளார் எதிர்கொண்டு ஆடித் தம் வினையைப் போக்குவதற்கு மருந்தாகத் துறையிடத்தே பொலியும். இவ்வகையான துறையுடைய இருந்தையூரிடத்து அமர்ந்த செல்வ! அடியேங்களது தலைமீது நின் பாதங்கள் பொருந்தும்படி வணங்குகின்றோம்.

ஒரு பக்கத்தே அழகிய மலருடைய வேங்கையும், கடம்பும் மகிழும் முறுக்கவிழ்ந்த மலருடைய அசோகும் உலர்ந்து செறிந்து பொங்குதலால் நீல நிறங்கொண்ட மலை விளங்கும். ஒரு பக்கத்தே, தண்ணிய நறிய தாமரைப் பூவின் அழகிய நிரையாகிய இதழ்களிடத்து வண்டுகள் ஊதுதலின், விண்ணில் வான்மீன் பரந்ததோற்றமுடைய தடாகம் அழகு செய்யும். ஒரு பக்கத்தே விழா எடுக்கும் ஓசைக்கு மாறாக, எழும் உழவர் உழும் ஓசையைக் கேட்டுச் செவிடு பட்டுத் திரிந்து நாற்று நடுவோர் கூட்டமாக நிற்கும் செல்வம் மிகுந்த வயல்கள் பரந்துகிடக்கும். ஒரு பக்கத்தே, அறம்புரிதலோடு வேதம் ஓதும் தவம் முதிர்ந்து உயர்ந்த புக

மூடையராயும், தெளிந்த அறிவுடையராயும் ஒழுக்கத்திற் குறைவில்லாதவருமாயுள்ள அந்தணர் கூட்டமாக வாழும் மனைகள் பொலியும்.

ஒரு பக்கத்தே, உண்பனவும், பூசுவனவும் அணிவனவும், உடுப்பனவும், அலங்கரிக்கும் மணியும் பொன்னும், மலைபடு கடல் படு திரவியமும் ஆகிய பண்டங்களையும்; குற்றந்தீர்ந்த பயனைத் தருகின்ற நெசவு பொருட்களையும் வைத்து வியாபாரஞ் செய்யும் கடைவீதிகள் விளங்கும். ஒரு பக்கத்தே வன்புல மென்புலன்களை விளைவிக்கின்ற உழவரும், அவர் கீழ் குடிகளாகிய கழமர்வாழும் வீதிகளிருக்கும், பிறபக்கங்களில் இவைபோன்றனவும் காட்சிக்கு இன்பம் அளிக்கும் நல்ல அழகிய வீதிகளும் விளங்கும்.

கைவளை ஒலிக்க வண்டு பொரேரென்று எழுகின்ற மிகுந்த தேன் வடியும் பூக்களை வேய்ந்த கூந்தலும், குழை அணிந்த காதும், குண்டலத்தின் ஒளிபட்டு விளங்குகின்ற நெற்றியும் ஊருகின்றதும் தோட்டியால் அடக்கப்படுவதுமாகிய யானையை ஒத்த மைந்தரும், பின்னிமுடிந்த கூந்தலும், வரிந்து கட்டிய வில்போன்ற புருவமும், விளங்குகின்ற ஆபரணமும், ஒடுங்கி விளங்குகின்ற நெற்றியும் அழகும் நாணும் உடையோருமாகிய அழகிய மகளிரும் நின்கோயிலிடத்தே கூடுவர். இன்னும் இடபத்தை ஒத்த நடையுடையோரும், மிருவான நடையுடையோரும், கடலின் நிரைத்த

திரையும் நுரையும்போன்று கருநரையினரும், விளங்குகின்ற சந்திரனின் கதிர்போன்று அற நரைத்தோரும் சமைத்தற்குரியனவும், குடையும், புகையும் பூவும் ஏந்தி இடையே ஈவு இன்றி நின் பாதங்களை வணங்குதற்கு நெருங்கிக் கூடுவர். அவ்விடத்திற் கூடுதலாகிய வினையின் விளைவைப் பெற்றவர் வினையின் பெரிய பயன் நுகரும் அசைவில்லாத பெரிய சிறப்புடைய சுவர்க்கத்தை ஒத்தது, விளங்குகின்ற பெரிய சிகரமுடைய மலையிடத்து வீற்றிருக்கும் திருமாலின் கோயில்.

வண்டும் தும்பியும் இனிய நரம்புடைய யாழோடு ஆர்த்தன. உயர்ந்த மதமுடைய யானைகள் மேகத்தோடு ஆர்த்தன. நிறைந்த அருவிகளோடு பெரிய முழவுகள் ஆர்த்தன. செவ்வரி பரந்த கண்ணுடைய மகளிரோடு ஆடவர் கூடி விருப்பமிகுந்த பாடலும் ஆடலும் புரிந்தனர். காம பானத்தோடு காமமகிழ்ச்சி மலர்ந்தது. சிவந்த நறவமலரோடு கண்கள் சிவந்து காமவிருப்பம் மிகுந்தது. நின்னுடைய மலையிடத்தே ஆபரணங்களணிந்தோரும் பூச்சூடிய முடியுடையோருமாகிய நாகரது நகர் போல இவையும் இவை போன்றன பிறவும் பொருந்தும்.

நீலமணி போன்ற தன்மையைப் பெற்றுச் சுருண்டு தழைத்து நீண்டு விளங்குகின்ற புகழப்படும் கூந்தலிடத்து சூடிய முறுக்கவிழ்ந்த மலர்களின் தெரிந்த விளக்கமும், விளக்கமுடைய

வண்டுகள் தேனை நுகரும் மலரின் அழகை உண்ட கண்ணும், ஒள்ளிய நெற்றியுமுடைய மகளிர், நீல மயிலின் நடையோடு மாறுபட்டகடிய ஆண்யானையின் நடையுடைய மைந்தரோடு, எல்லா அழகும் பொருந்திய பழைய புகழ் பொருந்திய மலையிடத்தே அதற்கேற்ப அமர்ந்தவனது கோயிலிடத்து வந்து விரை விற்றமது துன்பம் நீங்க வழிபடுவர்.

விளங்குகின்ற பாற்கடலைக்கடைந்த காலத்து சேடன் மாமேருமலை விளங்க அதனைப் பிடுங்கி அழகிய சிரசில்வைத்து மீன் துள்ளுகின்ற கடலிடத்தே நாட்டினன். நாட்டித் தான், தேவர் அசுரர் என்னும் இருதிறத்தோர்க்கும் அமுது கடைய இரண்டு பக்கத்துக்கும் கடைகயிறாயினன். கடைகயிறாகிய பெரிய வடத்தைத் திருமால் கடைய ஒருதோழுங்காலம் வலிகுன்றாதுகிடந்தான். அவன் இயமனின் பெரிய வலியை ஒத்தவலிமையைப் பூண்டோன்; அழகிய பணி வில்லாத வலிய இடபவாகனன் முப்புரத்தை எரித்த போது, உயர்ந்த இமய வில்லுக்கு நாணாகிப் பழைய புகழைப் பூண்டான். இத்துணைய புகழமைந்த சேடன் ஆயிரந்தலையை விரித்து இருக்கும் பாம்புகளாகிய சுற்றத்தையுடைய கடவுளைத் துதித்து, யாமும் எம் சுற்றமும் நின்னைப் பிரியாதிருக்க வேண்டுமென்று வணங்குகின்றேம்.

வையை

பெரிய நிலந்தோன்றாது மிகுந்த மழை பெய்தது. உயர்ந்த வானம் மயங்கி மிகுந்த மழை பெய்

தலும், உயர்ந்த கரிய நாக மலையிடத்துள்ள நறிய மலர் பல வற்றின் வாசனையோடு வையை கூடலி டத்தே வேகமாக வந்தது. கூடலிலுள்ளார் வை யைப் புதுப் புனலால் அழகு பெற்றதென்று ஆட விரும்பினர். மாலை அணிந்து மகிழ்ச்சி மிகுந்த வர்களாய் ஒன்று சேர்ந்தனர்; ஊரிடத்துள்ளோர் ஒருவரைப்போல் ஒருவர் தம்மை அலங்கரித்தனர்; கடை வீதி, நிறமொன்று பட்ட வெவ்வேறு நீர் விளையாட்டுக்குரிய மக்களால் நிறைந்தது.

கையிறைற் றொடுத்த மாலையும் கண்ணியும் சூடி யோரும், அழகிய நறும்புகை ஊட்டியோரும் அழ கிய ஆடை உடுத்து நெய் பூசிய கூந்தலரும் ஆகிய தளிரின் இயல்பையுடைய மகளிர் யானை மிசைய ராய் விரைந்து சென்றனர். செருக்குடைய குதிரைகளின்மீதும், அழகிய வண்டியும் தேரு மாகியவற்றை ஊர்ந்தும் மகளிர் எவ்விடத்தும் கூட்டங் கூட்டமாக நெருங்கிச் சென்றனர். வண்டி யிடத்தே உடம்பைச் சட்டையால் மறைத்துச் செல்வோராயும், கூடுவாராயும் ஊடலொழிப்போ ராயும், ஊடுவாராயும், ஆடுவாராயும், பாடுவாரா யும், ஆரவாரஞ் செய்வாராயும், நகை ஆடுவோ ராயும், நகையாடி ஓடுவோராயும், ஓடித் தளர்வோ ராயும், உறவினரைத் தேடுவாராயும், தேடி ஊரிடத்தே திரிவோராயும், அவரைக் காணுது கற்ருரும் கல்லாதவரும் கீழ் மக்களும், பெற்ருரும், கணவரைப் பிழையாத பெண்டிரும் பொன் தேரு

டைய பாண்டியனது கூடலிடத்தும் வையைத் துறையிடத்தும் அளவிடற்கரியர்.

துறையாடுகின்ற தங்கணவரின் தோள் புணையாக ஆடுகின்ற பரத்தையரை, அவர் மனைவியர் மயக்கத்தால் அறியார். என்னே இந் நிகழ்ச்சி எம் முன்னே நிகழா நின்றது என பிறை ஒத்த நெற்றியுடைய அவர் மனைவியர் எல்லோரும் தங் கணவரோடு ஊடி அப்பரத்தையரைக் கண்டிப்பர். அகன்ற வையைத்துறையிடத்து ஆடும் தன் கணவனின் மாலையை நீர் கவர்ந்து அயலே நின்றாள் ஒருத்தியின் கூந்தலிற் சூடிற்று. அதனைக் கண்டு தாவென்று அவனது காதலி கேட்டாள். புனல் வலியத் தந்து என் கூந்தலை வேய்ந்தது. வருந்துகின்ற, ஆபரணமணிந்தவளே அதற்கு வருந்தத் தக்கதைச்செய்யேன். இவ்வழகு போதல் உண்டு என்று அறிந்து புனல் செய்ததோ! இது பெரும் வியப்பாக யிருந்தது, என்று கூறினள். அது கேட்ட தலைவி, மிருதுவாகிய பூத்தந்த காதற்கிழமையால், விரும்பத்தக்க நல்லவளின் அழகிடத்தே மயங்கிக் கூடும் கூட்டம் உண்டாகும். இப் புனலும் அவளுக்குத் துணையாய் நின்றது. மாலையை நீரிடத்து விட்டோய்! நீ அவட்குத் துணையாயிரு. உயர்ந்த சிறப்புடைய பாண்டியன் அணியும் மாணிக்கம்போன்று அழகிய மேனியும், முத்துப்போன்ற எயிறும், அழகிய பவழம்போற் சிவந்த வாயும், அறக் கற்புமுடைய

பெண்டிர் நவரத்தின மாலை யணிந்த தமது கணவ ரோடு ஆடுதல் வையைப் புனலிடத்து ஒழிவின் ருகும்.

புனலின் ஊடே போகின்ற ஓர் பூ மாலை கொண்டை யிடத்ததாதல் ஊழ்வகையினல் ஆயிற் றென்று ஏற்றுக் கொள்ளும் இயல்புடைய புன லிடத்தே, பரத்தையர்க்கு நாட்டார் அறியும்படி பூமாலையைச் சூட்டி நினைவாரின் நெஞ்சை வருத் தும் கொடுமையோடு, கூடுதலின் முன் நிகழும் ஊடல் கூடித் தீர்ந்த விடத்து, ஊர் அவரைக் கேட்டு மறுபடியும் ஊடாளோ எனும்படி வண்டு கள் மொய்க்கும்படி கள்ளு நிறைந்தது.

வண்டு மொய்க்கின்ற கள்ளையுடையது இவ்வா றெனப் பார்ப்பார் அதிற் படியாது சென்றனர். மைந்தரும் மகளிரும் மணமுடைய பொடிகளைத் தூவின ரென்று அந்தணர் தோயா தொழிந்த னர்; தேன் பொருந்திய மையால் வையை நீர் வழு வழுப்புற்றதென ஐயர் ஆற்றில் வாய்பூசா தொழிந் தனர்.

வாசனை கலந்த ஒலிக்கின்ற நுரையோடு கரைவழியே ஊர்ந்து செல்லும் புனலும், ஊரி டத்தே வருகின்ற புனலும், மலைகளினின்று கட லுள் ஓடுகின்ற புனலும், நுரையோடு மதகு தோறும் ஓடுகின்ற புனலும் கரைபுரண்டு கட லிடத்தே செல்லும். இவ்வாறு செல்கின்ற வெள் ளத்தின் மிகுதி ஓய்வின்ருகும். மணி அணிந்த

யானைமீது மைந்தரும் மகளிரும் ஒருமித்து நிரை நிரையாகச் சென்று கூடினர். உயர்ந்த மணிகட்டிய யானையுடைய நால்வல்ல பாணன் மருதமுன் துறையின் முன்புறத்தை அடைந்து பாணரோடு பிணித்த யாழிடத்தே தெளிந்த மருதப் பண்பாடுவன். பாடிப் பாடிப் பாய்கின்ற புனலிடத்தே நீராடுவன். கணவரோடு தலைவியர் ஊடுவர்; பின் ஊடல் தீர்க்கத் தீர்ந்து கூடி மகிழ்வர்; மகிழ்ந்து ஒருவரை ஒருவர் தேடி இளைப்பர்; ஒருவரை ஒருவர் தொழுது மகிழ்வர். நீர் நிறைந்த வைகை யித்தன்மையினதா யிருந்தது. கிழக்கேயுள்ள அறிவுடையீர்!

மிகுந்த அழகுடைய மங்கையரும் மைந்தரும் ஆடி ஒலித்த இந்நீர் முழுவதும் எச்சிலாகிச் சாந்தும் கமழ்கின்ற மாலையும், சுண்ணமும் பெண்களின் கூந்தலும் ஆண்களின் பித்தையும், வாடிய பூவும் அல்லாது இவ் வையையாறு நீர் நிறந் தோன்றாது. மழை நீர் வற்றிய குளத்து வாயலம்பி ஆடிய குங்கும நிறமுடைய அழுக்கடைந்த கலங்கல் நீர் போன்றது வையை.

அச்சந்தரும் கொல்லும் யானையும் உயர்ந்த தோளுமுடைய பாண்டியன் அழகிய கூடலிடத்தவரோடு வையையின் வருகின்ற புதுப் புனலாடிய தன்மை, இப்பெரிய லோகத்தில் உவமிக்கும் பொருளில்லாத பெருமையுடைய ஆகாய கங்கை

யிடத்து, ஆயிரங்கண்ணுடைய இந்திரன் ஆடியது போலாகும்.

மதுரை

புலவர்களது புலமையாகிய தராசின் ஒரு தட்டில் இவ்வுலகத்தை வைத்து, மற்றொரு தட்டிற் றன்னை வைத்து நிறுக்க உலகமுழுவதும் மிதக்கத் தான் பாரத்திறற் றானுந்தன்மை யுடையது நான்மாடக் கூடல்.

திருமாலின் கொப்பூழில் மலர்ந்த தாமரையை ஒக்கும் அழகிய கூடல்! அப்பூவின் இதழை ஒத்தன வீதிகள். இதழகத்தே இருக்கும் காய் போன்றது பாண்டியனது அரண்மனை. தண்ணிய தமிழ்க் குடிகள் அதன் தாதை ஒப்பர். தாதை ஊதும் வண்டை ஒப்பர் பரிசில் பெறும் புலவர். எமது ஊர், பிரமாவின் நாவிற் பிறந்த வேதங்களை ஓதும் குரலைக் கேட்டு எழுவதல்லது, சேரரது உறையூரையும் சோழரது வஞ்சியையும் போல கோழியின் குரலைக் கேட்டு எழாது.

தண்ணிய தமிழை வேலியாகவுடைய தமிழ் நாட்டின் இடமெல்லாம், நின்று நிலைபெற்றுப் புகழ்பெருகுதலல்லது, மதுரையிடத்துக் கொடி கட்டிய தேரையுடைய பாண்டியனது பரங்குன்று நிலைபெறுமட்டும் குறைவுபடுதலுண்டோ.

திருமகளுக்கிட்ட திலதம் போல உலகம் விளங்கும்படி புகழ் பூத்தலல்லது, மதுரையிடத்து

அலங்கரித்த தேரையுடைய பாண்டியனது வையை உண்டாமளவும் பொய்யாதலுண்டோ.

கார்த்திகைப் பெண்களின் காதிற்றூங்கும் கனமுடைய மகரக் குழைகளைப் போல் அழகாக விளங்கிச் செல்வம் மிகுதலல்லது மதுரையிற் கொடி கட்டிய தேருடைய பாண்டியனது வார்த்தை உள்ளளவும் வறுமை உண்டாகுமோ.

ஈவாரைப் புகழ்ந்து ஏற்பாரைப் பார்த்து மகிழும் அழகிய மாடங்களையுடைய கூடலும் செவ்வேள் பரங்குன்றுமாகிய இடங்களில் வாழ்வாரே புத்தேள் உலகு போவார்.

உரைச்சிறப்புப்பாயிரம்.

* சிவபெருமான், தலைமையுடைய அகத்தியன், கூரிய வேலுடைய குமரன் முதலிய திருந்திய தமிழ்ப் புலமையுடையார் அரிய தமிழ் நூல்களை ஆராய்ந்த சங்கம் என்னும் உயர்ந்த கடலுள் பரிபாடலாகிய அமுதம் அரிதாக எழுந்தது. தமிழ் அரசர்களின் தடுமாற்றத்தால் குற்றமில்லாத தமிழ் நூல்கள் நெடுங்காலங் கற்பாரின்றிக் கிடந்தன. அந்நூல்களின் பெருமையை அறிவுடையோர் நண்குணரவும் கந்தி என்பவர் நூல்களின்

* சங்கமாரம்பித்த காலத்துப் புலவர்களும் அரசனும் தமது வழிபடு கடவுள்களாகிய முருகவேள் சிவபெருமான் முதலியோரின் திருவுருவங்களைத் தம்மெதிரில் வைத்து அவர்களே கழகத்துக்குத் தலைவர் எனக் கூறினாராதல் வேண்டும். இவ்வுபசார வழக்கே பின்மெய்க் கதை போல் வழங்குவதாயிற்றுப் போலும்.

இடை இடையே பாடிச் சேர்த்த பிழையும், ஏடெழுதுவோர் பொருள் தெரியாமல் எழுதிய பிழையும், பாடகர்களால் நேர்ந்த பிழையும் ஆகிய இவை திருந்திய அறிவுடையோரின் செவியை வெதுப்பவின், சிறிது கற்றோர்க்கும் தெள்ளிதிற்பொருள் தோன்ற, அறிவின் தகைமையை விதிமுறையே பெருக்கிய வரும், திருமால் மரபில் வந்தாருமாகிய பரிமேலழகர், அளவிடப் படாத சிறப்போடு முன்னோர் பாடிய பாடலின் பொருளைச் சுருங்கிய பொருளில் விளக்கிக் காட்டினார்.

வண்டு பாடுகின்ற துளப மாலையணிந்த உயர்ந்த தோளாய்! பரிபாடலின் பயன் அழகிய நீலமலை இமயக் குன்றின் மீது வந்தாற் போல கருடன் மீது செல்லும் திருமாலே.

முற்றும்.

Printed at The Royal Printing Works, Mount Road, Madras.